ஸ்ரீ

# சாரதா தேவியாரது சரிதம்

ஸ்வாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
சென்னை.

ஸ்ரீ

# சாரதா தேவியாரது சரிதம்

ஸ்ரீ சித்பவானந்த சுவாமிகள்

இயற்றியது



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

சென்னை

1940



[விலை அணா எட்டு

# பொருளடக்கம்




பக்கம்

| | | |
|---|---|---|
| க. | பிறப்பும் பயிற்சியும் ... | க |
| உ. | பால் மணத்தில் திருமணம் ... | எ |
| ங. | கணவரை நாடிக் காளிகோயில் ஏகுதல் ... | கச |
| ச. | பத்தாவுக்கு ஏற்ற பதிவிரதை ... | உங |
| ரு. | ஞானத்தாயின் பதவியைப் பெறுதல் ... | ஙக |
| சா. | அத்யாத்மிக வாழ்வு ... | ஙஎ |
| எ. | தற்கொண்டாரைப் பேணுதல் ... | சங |
| அ. | நலனும் பொலனும் கூடிய பல நிகழ்ச்சிகள் | ருங |
| கூ. | தற்கொண்டார் திருமேனி துடைத்தல் ... | சாஉ |
| கO. | தீர்த்த யாத்திரை ... | சாசா |
| கக. | நகரத்திலும் நாட்டுப் புறத்திலும் ... | எச |
| கஉ. | அன்னை அளித்த அருள் விருந்து ... | அசா |
| கங. | அன்னையின் அருள் நிலை ... | கOO |
| கச. | பூதவுடல் நீத்துப் பொன்னுடல் புகுதல் | ககங |




# ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம்

## முதல் அத்தியாயம்

## பிறப்பும் பயிற்சியும்

வங்காள ராஜதானியில் பாங்குரா ஜில்லாவில் ஜெய ராம்பட்டி என்னும் கிராமம் ஒன்று உண்டு. இதன் வடபுறத்தில் அமோதை என்னும் பெயர் பூண்ட சிற்றாறு ஒன்று ஓடுகிறது. ஊரைச் சுற்றிலுமுள்ள கழனி கள் வளம் மிக வாய்க்கப் பெற்றவை. நன்செய்ச் சாகுபடி மக்களின் முக்கியமான தொழிலாகும். நில மகள் அருளால் உழைப்புடைய ஜெயராம்பட்டி வாசிக ளுக்கு உண்ணிருக்கும் உணவுக்கும் குறை யொன்று மில்லை. இக்காலத்தில் அக்கிராமத்தை உடற்றும் முறைக்காய்ச்சல் சுமார் நூறு வருஷங்களுக்கு முன்பு ஆங்கு இல்லவே யில்லை. நோயற்ற வாழ்வு எனும் குறை வற்ற செல்வம் மாந்தர் முகவிலாசத்தில் மிளிர்வதா யிற்று. சிம்ஹவாகினி என்று அழைக்கப்படும் அம் பாள் அக்கிராமத்தின் அதிஷ்டான தேவதையாவாள். தேவி வழிபாட்டில் இடையிடையே நிகழ்ந்து கொண் டிருந்த திருவிழாக்களும் ஏனைய நோன்புகளும் அமைதி யான நாட்டுப்புற வாழ்க்கைக்குப் புத்துயிர் ஊட்டி மகிழ்விப்பன வாயின.

இச்சிற்றூரிலே இராமச்சந்திர முகோபாத்யாயர் எனும் ஏழைப்பிராமணர் ஒருவர் வாழ்ந்திருந்தார்.

அவர் நெறிதவறாத நேர்மையுடையவர். ஸ்ரீ ராமபிரானிடத்து அவருக்குப் பரம பக்தி யுண்டு. ஒழுக்கமில்லாதவர்களிட மிருந்து அவர் எதையும் தானமாகப் பெற்றுக்கொள்வதில்லை. இன்னியல்பு, அடக்கம், பணிவு முதலியவைகள் அவருக்கு அணிகலமாயின. ஊரார்ரை உடன்பிறந்தாரென மரியாதையுடன் அழைப்பது அவரது வழக்கம். பஞ்சத்தால் ஒரு தடவை பிரஜைகள் பரிதவித்துக் கொண்டிருந்தகாலை, இராமச்சந்திர முகோபாத்யாயர் தம்மைப் பற்றியும் தமது குடும்பத்தைப் பற்றியும் கவலை யில்லாதவராய்த் தம் கைவசமிருந்த தானியங்களை யெல்லாம் சிறிது சிறிதாகச் சமைத்து அன்னமளித்துப் பாமரரது பசிப்பிணியைத் துடைக்க முயன்று வந்தார். தாம் வாழ்ந்திருப்பதே பிறர் நன்மையின் பொருட்டு என்னும் எண்ணத்தில் நிலைநின்றவராவர் அவ் வந்தணர். அவருக்கு ஏற்ற வாழ்க்கைத் துணைவியாராக வாய்த்தவர் சியாமா சுந்தரி தேவி என்பார். உடலின் திட்பமும், ஓயாது உழைக்க வல்ல ஆற்றலும், குடும்ப காரியங்களைச் செவ்வனே செய்து முடிக்கும் திறமையும் அவ்வம்மைக்கு மிக வுண்டு. ஈசுவர பக்தியிலும் மேலாம் வாழ்க்கை வாழ்தலிலும் பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையென்று அவரைச் சொல்ல வேண்டும். குழந்தையின் இயல்பு, களங்கமற்ற நெஞ்சம், கஷ்டப்படுவாரிடத்துக் காருண்யம் காட்டுதல் முதலிய மேன்மைகள் அவரை விட்டுப் பிரியாதிருந்தன.

ஆடம்பரம் ஒன்றையும் அறியாத அத்தகைய ஊரிலே, அறநெறியே வடிவெடுத்திருந்த தம்பதிகளுக்குத் தலைப்பேறாக, கி. பி. 1853-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 27-ம் தேதி—மார்கழித் திங்கள் கிருஷ்ணபக்ஷம் சப்தமியன்று நம் கதாநாயகி திருமேனி தரிப்பாளா

யினள். பெற்றோரும் மகவுக்கு சாரதாமணி என்று நாமகரணம் சூட்டி அன்பு பாராட்டி வளர்ந்து வந்தனர்.

குழந்தைப் பருவத்தில், குறிப்பிடத்தக்க செயல் ஒன்றும் சாரதாமணியின் வாழ்க்கையில் சம்பவிக்க வில்லை. கிராமத்துச் சிறுமிகள் இந்தியாவில் எங்ஙனம் வளர்கின்றனரோ, அதே முறையில் இவளும் வளர்ந்து வந்தாள். மரப்பாவைகளிலும் களிமண் உருவங்களிலும் இவளுக்கு மிகப்பிரியம். பொம்மைகளைத் தங்கள் குழந்தைகளாகக் கருதுவது சிறுமிகளின் வழக்கம். ஆனால் சாரதாமணிமட்டும் அவைகளைத் தேவதைக ளாகக் கருதி வழிபட்டது அவளுடைய தனியியல்பு என்று சொல்லவேண்டும். கிராமத்துச் சிறுமிகளுடன் கூடி சாரதா விளையாடுவாள். ஆனால் சண்டையிடுவது இவளுடைய இயல்பில் இல்லாதிருந்தது மன்றி மற்றச் சிறுமிகள் சண்டையிடுவதையும் இவள் பார்த்துச் சகி யாள். அவர்களுக்கிடையில் உண்டாகும் சச்சரவுகளைத் தீர்த்துவைத்து நட்பை வளர்ப்பது இவளுடைய வழக் கம். சின்னஞ் சிறார்களுக்கிடையில் இவள் தலைவி யாகத் திகழ்ந்து வந்தது இவளுக்கே தெரியாது.

இந்தியச் சிறுமிகளுக்கு வயது வர வர, வீட்டில் வேலையும் கொஞ்சங் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டே வரும். அப்பணிவிடைகளைப் பண்புடன் செய்வதே அவர்கள் பெறும் பயிற்சியாகும். பெண் குழந்தைகளின் படிப்பைப் பற்றிப் பெற்றோர் கவலை யுறுவதில்லை. மங்கையர் தம் தம் குல ஒழுக்கத்துக்கு ஏற்ப வாழத்தெரிந்து கொண்டால் போதும் என்பதே அவர்களின் நோக்கம். சாரதாமணியும் இக் கொள்கைக்கு உட்பட்டவளா யிருந்தாள்.

தன் தம்பிமார்களைப் பராமரிப்பது அவளுக்கு முதன் முதல் ஏற்பட்ட வேலையாகும். ஆனால் அது அவளுக்கு, ஒரு கஷ்டமான கடமையாகத் தோன்றவில்லை. உடன் பிறந்தவர்களுடன் ஓடி யாடி விளையாடுவது, அவர்களுக்கு ஆபத்து ஒன்றும் வாராது பார்த்துக் கொள்வது, அவர்களால் அன்னைக்கு இடைஞ்சல் அதிகமாய் உண்டாகாது எச்சரிக்கை யெடுத்துக் கொள்வது—இங்ஙனம் அவளுக்கு விளையாட்டும் வேலையும் இணைபிரியாது வாய்த்தன. தம்பிமார்களைச் சாரதா பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போவாள்; அவர்கள் ஆங்குக் கற்பதையெல்லாம் இவளும் கேட்டுக்கொண்டிருப்பாள். ஆனால் அவள் என்ன கற்றுக்கொண்டாள், அல்லது கற்றுக்கொள்ளவில்லை என்பதைப்பற்றிப் பெற்றோராவது உபாத்யாயராவது கவலைப்பட்டார்களில்லை. பிற்காலத்தில் பர்த்தாவுடன் வாழ்ந்திருந்த பொழுது ராமாயணம் போன்ற நூல்களைப் படிக்க இவள் வேறு சில பெண்களின் உதவியைக்கொண்டு கற்றுக்கொண்டாள். ஆனால் எழுதும் பயிற்சியை இவள் பெறவில்லை; எழுதவேண்டிய அவசியமும் வாய்க்கவில்லை.

வீட்டு வேலைகளில் சமைப்பது மிக முக்கியமானது. அதில் சாரதாமணி தன் தாய்க்கு அடிக்கடி உதவி புரிவாள். சிலவேளைகளில் சமைக்கும் பொறுப்பு முழுதையும் அவளே : எடுத்துக் கொள்ள வேண்டி வரும். ஆனால் சாதத்தை வடிக்கவோ, அன்னம் நிறைந்த தவலையை அடுப்பினின்று இறக்கவோ அச் சிறுமிக்கு இயலாது போம். அவள் அத்தகைய கடினமான வேலைகளுக்குத் தந்தையை அழைப்பாள். அவரும் அன்புடன் அப்பணிகளை அவள்பொருட்டு ஆற்று

வார். வீட்டு வேலைகளைச் செய்வது போன்று வயலில் ஏற்பட்ட வேலைகளையும் தன் சக்திக்கு ஏற்றவாறு அவள் செய்து வந்தாள். கழனியில் தன் கழுத்தளவு நீர் நிற்கு மிடங்களுக்குச் சென்று அவள் பசுவுக்காகப் புல் அறுப்பாள். தந்தையின் உத்தரவுப்படி வயலில் வேலை செய்த ஆட்களுக்கு அவள் சிற்றுண்டி சுமந் தெடுத்துச் செல்வாள். வயலில் அறுவடை போன்ற வேலைகளையும் அவள் செய்ததுண்டு.

கிராமத்துப் பெண் ஒருத்தி சாதாரணமாக வாழ்கின்ற வாழ்க்கையையே சாரதாமணியும் வாழ்ந்து வந்தாள். அத்தகைய வாழ்க்கையினின்றும் பொதுமக்களுக்குத் தக்க கல்வியும் பயிற்சியும் கிடைப்பதில்லையென்று கருதலாகாது. முற்காலத்தில் இந்தியாவில் நற்பயிற்சியை எழுத்துப்படிப்போடு இணைத்து வைத்தார் களில்லை. எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் கணக்கற்ற பேர் உயர்ந்த ஞானமும் ஒழுக்கமும் அமைந்திருந்தனர். அக்காலத்திய வாழ்க்கை முறையே அதற்குத் தூண்டு கோலாயிற்று. பெற்றோர் கொடுத்த பயிற்சி மாறாது மனதில் படிந்திருந்தது. பிறர்க்குச் சேவை புரியும் இயல்பு புஸ்தகத்தில் படித்து வருவதன்று. முதியோரைப் பின்பற்றும் சிறியோர்க்கு அந்த உயர் குணம் தானே வந்தமைகிறது. பெற்றோர் கற்றுக் கொடுத்த நல்லியல்பை மேலும் வளர்ப்பதற்குத் துணையாகச் சமுதாயப் பழக்க வழக்கங்கள் பல இருந்தன. தேவாலயங்களில் பக்தியுடன் உற்சவங்கள் கொண்டாடுதல், புராண இதிகாசங்களைப் பாங்குடன் படித்தோதுதல், பெரியார் பெருமைகளை நாடகங்களின் வாயிலாகப் புகட்டுதல், சத்காலக்ஷேபங்கள் நடாத்துதல் முதலிய சீரிய செயல்கள் அக்காலத்தில் அடிக்கடி கிராமங்களில்

நிகழ்வன வாயின. நாட்டின் மேலாம் கொள்கைகளை யும் கோட்பாடுகளையும் ஆடவர் மகளிர் ஆகிய இருபா லாரும் எளிதில் கேட்டுத் தெரிந்து கொள்ளுதற்கு, அவை பெரிதும் பயன்பட்டன. இக்காலத்து ஏட்டுக் கல்வியினின்று உண்டாகும் மனத்தடுமாற்றம் எதுவும் அக்கேள்வி முறையினின்று உண்டாகவில்லை.

அறிவைப் பெறுதற்கு அத்தகைய தூய சந்தர்ப் பங்கள் சாரதாமணிக்குப் பெரிதும் வாய்த்தன. நற் குடியில் பிறந்ததன் பயன் முதலாயது. தன் அன்னை யும் பிதாவும் அவளுடைய உள்ளத்தில் உயர்நிலை வகித்து வந்தனர். அவர்களைப் பற்றிப் பிற்காலத் தில் பேசும் பொழுதெல்லாம் அவள் அவர்களைப் போற்றவும் பாராட்டவும் செய்தனள். தன் கிராம மாகிய ஜெயராம்பட்டியில் அக்காலத்தில் மேலாம் வாழ்க்கையின் அம்சங்களெல்லாம் அமைந்திருந்தன. அக்கம்பக்கத்தில் இருந்த ஊர்களின் நிலைமையும் அத்தகையதே. அவ்வூர்களில் தேவாலயங்களில் நிகழ்ந்த திருவிழாக்களும் ஏனைய சத்காலக்ஷேபங் களும் சாரதாமணியின் மனதில் ஆழ்ந்து பதிந்து அவளது தெய்வத்தன்மையை வளர்த்து வந் தன. அக்காலத்தில் பாடகர்களிட மிருந்து அவள் கேட்டுத் தெரிந்து கொண்ட சுலோகங்களையும், கீர்த்த னங்களையும், பக்தி புகட்டும் பாடல்களையும் பிற்காலத் தில் தன்னைச் சரணமடைந்த சிஷ்யர்களுக்குப் புகட்டும் படி நேரிட்டது. இளமையில் கற்றது கல்வெட்டுப் போன்று மறையாது அவள் மனதில் படிந்திருந்தது. இதற்கெல்லாம் மேலாக இளம் பிராயத்திலேயே புக் ககத்தில் பர்த்தாவிடம் அவள் கற்ற பாடம் இணை யற்ற தாயிற்று. அத்தகைய வாய்ப்பு எல்லார்க்கும்

கிடைப்ப தன்று. வாழ்க்கையின் முடிவான லட்சியம் இன்னதென்று தெரிந்து அதைத் தானே அடைந்தது மன்றிப் பிறர்க்கும் அதைப் பகுத்தளிக்க வல்ல ஆற்றலை அக்கல்வியினின்றும் அவள் பெறலானாள்.



## இரண்டாம் அத்தியாயம்

# பால் மணத்தில் திருமணம்

ஜெயராம்பட்டிக்கு அருகாமையில் மேற்றிசையில் சிகூர் எனும் கிராமம் ஒன்று உண்டு. சாரதாமணியின் தாயார் சியாமா சுந்தரி தேவியின் பிறப்பிடமாகும் அவ்வூர். ஆங்கிருக்கும் சிவன் கோயிலில் ஆண்டு தோறும் திருவிழா நடைபெறுவதுண்டு. அது போழ்து அண்டை யயலில் உள்ளவர்க ளெல்லாம் அங்குக் கூடுவார்கள். கோவிலில் வந்தனை வழிபாடு செய்து விட்டு வேடிக்கை விநோதங்கள் பார்ப்பது சிலரது நோக்கமாகும். பஜனை பண்ணுவதும், பக்தி புகட்டும் கதா பிரசங்கம் கேட்பதும் வேறு சிலரது கருத்தாகும். ஸ்ரீமதி சியாமா சுந்தரி தேவியும் ஒரு வருஷம் அங்கே சென்றிருந்தார். தாங்கள் போம் இடங்களுக் கெல்லாம் தங்கள் குழந்தைகளையும் அழைத்துச் செல்வது தாய்மார்களது வழக்கம். அம்முறைக்கு ஏற்ப இவ்வம்மையாரும் தமது செல்வி சாரதாமணியை உடனழைத்துச் சென்றிருந்தார். இவளுக்கு அப்போது பிராயம் மூன்று. கதா காலக்ஷேபம் இனிது முற்றுப் பெற்றது. முதியவர்கள் அமர்ந்த வண்ணமே நானுவிதமான விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்

டிருந்தனர். சிறுவர்களும் சிறுமிகளும் ஓலமிட்டு விளையாடிக் கொண்டிருந்தனர்.

பாவை போன்று இங்கு மங்கும் ஓடி உலவிய சாரதாமணியை மாது ஒருத்தி எடுத்து மடிமீது வைத்து அதனுடன் சல்லாபமாட ஆரம்பித்தாள். பெண்ணைப் பற்றிய பேச்சு என்றால், அல்லது பெண்ணுடன் பேச்சு என்றால், அது பெரும்பாலும் மணத்தைப் பற்றிய பேச்சாவதன்றோ நம் தேச வழக்கம்! சிறுமி சாரதை இவ்வழக்கத்துக்கு விலக்கு ஆனாளில்லை. அங்குக் குலாவி விளையாடிய இளைஞர்களைக் காட்டி, "குழந்தாய், இவர்களுள் நீ யாரை மணந்துகொள்வாய்? சுட்டிக்காட்டு பார்ப்போம்" என்றாள் மங்கை. அப்போது பலருடைய கண்ணும் கருத்தும் அக்காட்சியின் மீது பாய்ந்தன. விவாஹம் என்றால் இன்னதென்று அறியாத சிறுமியின் மெல்லிய சுட்டுவிரல் அங்கே சத்காலக்ஷேபம் நடைபெறுவதைப் பார்க்க வந்திருந்த, விபரீத மனப்போக்கையுடைய, சிந்தனையில் ஆழ்ந்திருந்த கதாதரனைக் குறிப்பிட்டது. இவ்வாறு தங்கு தடையின்றி வந்த உத்தரம் அங்குக் கூடியிருந்தவர்கள்பால் நகைப்பூட்டியது. ஆனால் விளையாட்டாக நிகழ்ந்த இச்சம்பவம் காலக்கிரமத்தில் சத்திய சங்கற்பமாய் முடியப்போகிறது என்பதை அப்போது யாரும் அறிந்திலர்.

ஜெயராம்பட்டிக்குத் தென்கிழக்கே சுமார் மூன்று மைல் தூரத்தில் கமார்புகூர் எனும் கிராமம் ஒன்று உண்டு. அது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரது ஜன்மஸ்தானமாகும். அந்நாளில் கதாதரர் என்ற பிள்ளைத் திருநாமம் படைத்திருந்த அவர் கல்கத்தா நகருக்கு அருகாமையில் தக்ஷிணேசுவர ஆலயத்தில் காளிகா

தேவிக்கு அர்ச்சகராய் அமர்ந்திருந்தார். இவ்விப்பிரர் பால் விளங்கிய விசித்திரமான மனப்போக்கைக் காணு லுற்றவர்கள் இவரை ஒரு பைத்தியக்காரர் என்று முடிவு கட்டினார்கள். அவரைப் பிடித்திருந்தது அருட் பித்து என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. இச் செய்தி நாளடைவில் கமார்புகூருக்கு எட்டியது. கதா தரரைப் பெற்றுவளர்த்த தாய் ஸ்ரீமதி சந்திரா தேவி யாரது மனதை இது எவ்வாறு புண்படுத்தியது என் பது சொல்லாமலே விளங்கும். புதல்வனைத் தமது அருகில் வரவழைத்து வைத்துக்கொண்டு அவ்வம்மை யார் நானாவிதமான சிகிச்சைகளைக் கையாண்டு பார்த் தார். ஆனால் ஒன்றும் பலிதமாகவில்லை.

கதாதரரது மனதை உருக்கி வாட்டுவது ஒருவித தெய்வீகப் பைத்தியம் என்று இறுதியாக எண்ணப் பட்டது. குடும்ப காரியங்களைப் பற்றியாவது அல்லது வேறு எந்த லௌகிக விஷயங்களைப் பற்றியாவது அவர் கவலை யெடுத்துக்கொள்ளவில்லை. இதற்குப் பரி காரமாகக் குடும்ப பாரத்தை அவர்மீது சுமத்தவேண் டும். இதற்கு உற்றதும் உறுதியானதுமான வழி விவா கம் செய்து வைப்பது ஒன்றே, என்று முடிவு கட்டப் பட்டது. பல நாளைக்கு முன்பே பாரியாள் ஒருத்தி யுடன் அவர் இணைக்கப்பட்டிருந்திருப்பாராகில் இத் தகைய விபத்து நேர்ந்திராது. இனியாவது விரைந்து பெண் தேடுவது உசிதம். இவ்வாறு தாயாரும் தமைய னாரும் தமக்குள் கலந்து பேசுவாராயினர். இச்சூழ்ச் சியை அவர்கள் ஆரம்பத்தில் கதாதரருக்கு அறிவிக்க வில்லை. ஒருவேளை இளைஞர் இடைஞ்சல் செய்வா ரென்று எண்ணி இரகசியமாக ஏற்பாடுகள் செய்து வந் தனர். ஆனால் எங்குச் சென்றும் ஏற்ற மணமகள்மட்

டும் அகப்படவில்லை. பெண் தேடிச் சென்ற விடங்களி லெல்லாம் விக்கினங்கள் பல விளைந்துகொண்டே வந் தன. இதை நினைத்து, பெற்ற தாய் பெருங் கவலை யுற்றிருந்தார். அன்னையின் துயரமறிந்து அதைத் துடைக்க விரும்பிய கதாதரர் ஒருநாள் ஒருவிதப் பர வச நிலையடைந்து, "ஏன் இங்குமங்கும் வீணே தேடி யலைகின்றீர்கள்? ஜெயராம்பட்டியிலே இராமச்சந்திர முகோபாத்யாயர் வீட்டிலே எனக்கென்று ஏற்பட்ட பெண் ஒருத்தி இருக்கிறாள். அங்குச் செல்லுங்கள்" என்றார்.

இடைஞ்சல் செய்வதற்குப் பதிலாகக் கதாதரர் உதவி புரிய வந்தது, தாயாருக்கும் தமையனாருக்கும் வியப்பூட்டியது. அவருடைய சொல்லில் பெற்றோர்க்கு அதிக நம்பிக்கையில்லை யெனினும், வேறு வகையொன் றும் தெரியாது ஏங்கியிருந்த உறவினர் அவ்வண்ணமே ஜெயராம்பட்டிக்குச் சென்று முயன்றனர். இராமச்சந் திர முகோபாத்யாயரும் முதலில் சிறிது மறுதலித் துப் பிறகு பெண் கொடுக்க ஒருவாறு ஒத்துக்கொண் டார். அப்பொழுது சாரதாமணிக்கு வயது ஆறு; வர னுக்கோ வயது இருபத்துமூன்று. பொருத்தமற்ற அச்சம்பந்தம் மாப்பிள்ளை வீட்டாருக்கும் பிடிக்க வில்லை. ஆயினும் வேறு எங்கும் பெண் அகப்படாமை யால் அவர்கள் அரைமனதாக அதற்கு ஒருப்பட்டனர். விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் விரை வில் நடைபெற்றன. 1859-ம் ஆண்டு மே மாதத்தில் சுப முகூர்த்தமொன்றில் ஜெயராம்பட்டியில் சாரதா மணி தேவி வைதீக விதிப்படி கதாதர சட்டோபாத் யாயருக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கப்பட் டாள்.

இரு குடும்பத்தாரும் ஏழைபாராதலால் விசேஷ மாகப் பொருள் செலவழித்து ஆடம்பரமாக மணச் சடங்கு செய்ய இயலவில்லை. ஆயினும் மணக்கோலத் தில் மணுட்டுப் பெண் ஆபரண மொன்றுமின்றி யிருப் பது உசிதமல்லவென்று எண்ணிய சந்திரா தேவியார் ஒரு தனவந்தர் வீட்டினின்று வேண்டிய பொன் நகை களை இரவல் வாங்கியிருந்தார். மணம் முடிந்து சில நாட்களில் பெண் கமார்புகூருக்கு அழைத்து வரப்பட் டிருந்தாள். அப்போது நகைகளைச் சொந்தக்காரருக் குத் திருப்பிக் கொடுக்கவேண்டியதாயிற்று. ஆனல் ஆசையுடன் அவைகளை அணிந்திருக்கும் சிறுமியின் மனதைப் புண்படுத்துவது எங்ஙனம்? மாமியாருக்கு மனக்கிலேசம் உண்டாயிற்று; என் செய்வதென்று ஏங்கியிருந்தார். இதைக் குறிப்பால் அறிந்த மைந்தர் கதாதரர் ஓர் உபாயம் செய்தார். தமது இளம் மனை யாள் இரவில் உறங்கிக்கொண்டிருந்தபோது, அவளது நித்திரைக்குப் பங்கம் ஒன்றும் செய்யாது, அணிகளை யெல்லாம் அதி சாமர்த்தியமாகக் கழற்றி யெடுத்து, சொந்தக்காரர் வீட்டுக்கு அன்னையின் மூலம் அனுப்பி விட்டார். காலையில் எழுந்த சாரதை தனது மேனிமீது நகையொன்றையும் காணுது திகைத்து, ஏமாப்புற்று, விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். அப்போது அவ ளது துயரத்தைக் கண்டு சகியாத சந்திரா தேவியார் அவளை வாரி யெடுத்து, மடிமீது வைத்து, கண்ணீர் துடைத்து, ஆறுதல் சொல்லி, அழுகையை நிறுத்தி ஞர். “கண்ணே, நீ கவலைப்படாதே. வயது வரும் போது கதாதரன் ஒப்பில்லா உயர் தன்மையில் உன்னை அலங்கரிப்பான்” என்றுர். மாமியார் மொழிந்த இக்

கூற்று அழிவிலாத ஆத்மீகத் துறையிலே முற்றும் நிறைவேறுவதாயிற்று.

தங்களது குமாரத்திக்கு நேர்ந்த குறையை அறியலான அன்னையும் பிதாவும், சம்பந்தியார் சந்திரா தேவியின்மீது மனங்கோணி, மகளை ஜெயராம்பட்டிக்கு அழைத்துக்கொண்டு போய் விட்டனர். விரும்பத்தகாத இந்நிகழ்ச்சியானது சந்திரா தேவியாரை மீண்டுமொருமுறை துன்பத்தில் ஆழ்த்தியது. ஆனால் சமயோசித புத்தியுடைய கதாதரர், "தாயே நீ துயரப்பட வேண்டாம். அக்னி சாக்ஷியாக, உலகறிய நிகழ்ந்த திருமணத்தை இனி அவர்கள் எங்ஙனம் விலக்க அல்லது மறுக்க முடியும்!" என்று சொல்லித் தேற்றினர்.

பிறகு மாதங்கள் பதினெட்டு கழிந்தன. 1860-ம் வருஷம் டிசம்பர் மாதம் சாரதைக்கு வயது ஏழு ஆயிற்று. பெண்ணுக்கு வயது ஏழு ஆகும்பொழுது 'பெண்ணும் மாப்பிள்ளையும் மாமனார் வீடு போவது' என்ற குலச்சடங்கு ஒன்று நடைபெறுவதுண்டு. அதை நிறைவேற்றுதற்காக கதாதரர் அப்பொழுது ஜெயராம்பட்டிக்குச் சென்றிருந்தார். அக்காலத்தில் அவருக்குக் குற்றேவல் புரிந்துவந்த அவரது அத்தையாரின் பிள்ளை ஹிருதயரும் அவருடன் சென்றிருந்தார். இவர்களுடைய வரவை அறிந்த இளம் மடந்தை சாரதை நாணி, வீட்டின் ஒரு மூலையில் போய் ஒளிந்து கொண்டாள். ஹிருதயருக்கு கதாதரரது தெய்வத்தன்மை ஒருவாறு புலனாயிருந்தது. ஆதலால் அவருக்குற்ற இல்லாளை விதிப்படி வணங்குவது முறையென்று கருதிய இவர் கையில் சந்தனமும் புஷ்பமும் ஏந்தி, சிறுமி மறைந்திருக்கும் இடத்தைத் தேடிக் கண்டு பிடித்து அவளது அடியிணையில் அர்க்

கியம் படைத்து வந்தனே வழிபாடு செய்தார். சில நாளைக்குப் பிறகு கதாதரர் பாரியாளுடன் கமார்புகூர் வந்தார். இப்பொழுது அவர் தக்ஷிணேசுவரத்தி லிருந்து தம் கிராமம் வந்து வருஷங்கள் கிட்டத்தட்ட இரண்டு ஆய்விட்டன. ஆதலால் தமது தூய கரு மத்தை நாடித்திரும்பவும் அவர் தக்ஷிணேசுவரம் ஏகி ஞர். சாரதையும் புக்ககம் விட்டுப் பிறந்தகம் போனாள்.

இந்தியாவில் இல்லறம் ஓர் உயர்ந்த வாழ்க்கை முறையாக எப்பொழுதும் கருதப்பட்டு வந்துள்ளது. மணம் புரிவது வெறும் சிற்றின்ப வாழ்க்கைக்கு அனு மதி கொடுப்பதற்காக வன்று. இருவர் கருத்தும் ஒரு மித்து தர்மத்தில் செல்லுதலே அதன் லட்சியம். தம் பதிகளின் மனது முற்றிலும் பண்பட்ட பிறகு உலக நன்மையின் பொருட்டு இரண்டொரு சத்புத்திரரைப் பெற்றெடுத்துவிட்டு ஞான வாழ்க்கையைக் கைக் கொள்ளுதலே கிருகஸ்த ஆச்ரமத்தின் நோக்கமாகும். முன்பு ஒரு காலத்தில் ஆண் பெண் ஆகிய இரு பாலா ரும் வயது முதிர்ந்த பின்பே, மேலும் கலைஞானங்க ளில் தேர்ச்சியடைந்த பின்பே, விவாகம் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர். முறையுடனே செய் தால் பாலிய விவாகமும் பெருநன்மை பயக்கவல்லது என்று அறிந்த ஆன்றோர் காலக்கிரமத்தில் அதைக் கடைப்பிடிக்கலாயினர். மேலான லட்சியத்தில் கருத்து வைக்காதவர்கள் பாலிய விவாகத்தினின்று நன்மை எதையும் பெறமுடியாது. அதனால் நன்மையை விடத் தீமையே அவர்களுக்கு அதிகமாய் விளையும். கிரகஸ்த ஆச்ரமத்தின் புனிதத்தை சமுதாயம் மறந்து கொண்டு வருகையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது வாழ்க்கையின் வாயிலாக அதன் உயர்வை விளக்கிக் காட்டினார்.

“மானுடா, நீ விவாகம் செய்து கொண்ட படியால் சிற்றின்பத்தை வேண்டியவாறு கைக்கொள்ளலா மென்று கருதாதே” என்று அவர் உபதேசித்ததற்கு இலக்காகத் தாமே அடக்கமே வடிவெடுத்து இலங்கினர். பால் மணம் மாறுதற்கு முன்பே மணமகளாக சாரதா தேவியார் அவருக்கு வாய்த்தார். அவர்களுக் கிடையே ஏற்பட்ட இணக்கம் உடல் சம்பந்தமானதன்று. முன்னுளைய மேலோர் வகுத்தபடி இல்லறம் எனும் நல்லறத்தை நிலை நிறுத்திக் காட்டவே ஸ்ரீ சாரதா சமேதராய் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவதரித்தார்.



## மூன்றும் அத்தியாயம்

# கணவரை நாடிக் காளி கோயில் ஏகுதல்

காலச்சக்கரம் சுழல்கிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரத்தில் கடுந்தபசு புரிகிறார். தமது உடலைப் பற்றிய உணர்ச்சி அவருக்கில்லை; பின்பு உறவினரைப் பற்றி எண்ணுவது எங்ஙனம்? அவரது மனத் தகத்தை விட்டு இளம் மனையாள் அடியோடு மறைந்து போய்விட்டாள்!

பெற்றெடுத்த தாய் ஸ்ரீமதி சியாமா சுந்தரீ தேவியின் பராமரிப்பில் புதல்வி சாரதை வளர்ந்து வருகிறாள். நாட்டுப்புற வாழ்க்கை அவளுடைய தூய இயல்புக்கு முற்றிலும் பொருந்தியதா யிருக்கிறது. உள்ளும் புறமும் சாந்தி குடிகொள்கிறது. களங்க மற்ற இன்பம் துய்ப்பவளாய் அவள் காலங் கழிக்கிறாள். இங்ஙனம் இன்னும் ஏழு ஆண்டுகள் கழிகின்றன.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மறுபடியும் கமார்புகூர் வந்திருக்கும் செய்தி சாரதா தேவிக்குத் தெரிவிக்கப் பட்டது. அவளும் அச்செய்தியை இன்புடன் கேட்டாள். அவளுக்கு அப்பொழுது வயது பதினைங்கு. விளையாடும் இயல்புடைய குழந்தைப் பருவத்தைக் கடந்திருந்தாள். அறிவு வளர்ச்சியையும் ஏகதேசம் பெற்றிருந்தாள். வாழ்வு சம்பந்தமான விஷயங்களைக் கருத்துடன் கிரகிக்கும் வல்லமை அவ்வணிதைக்கு வந்திருந்தது. தன் கணவரைக் காண வரவேண்டுமென்று வேண்டப்பட்ட பொழுது அவள் மகிழ்வுடன் இசைந்து சென்றாள். இதுபரியந்தம் இல்லாளைப் பற்றிச் சிறிதும் சிந்தியாதிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரும் இப்பொழுது தமது பொறுப்பை முற்றும் உணரலானார். எத்தகைய எண்ணத்துடன் அவள் தம்மை நோக்கி வந்திருக்கிறாள் என்பது அவருக்குத் தெளிவுற விளங்கிற்று. கணவனைக் கடவுளெனக் கருதுவது மனைத்தக்க மாண்புடையாள் செயல். அத்தகைய இயல்புடையவளை இன்புறச் செய்வதும் இன்னல் படுத்துவதும் கணவனுக்கே சாலும். இம்மைக்கும் மறுமைக்கும் தம் இளம் மனையாளுக்குத் தாமே கதி என்பதை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் அன்புடன் அவளை வரவேற்றார். அவர்பால் பொலிந்த புனிதத்தையும், அவர் பாராட்டிய அன்பினின்று வடிந்த தெய்வத்தன்மையையும் சாரதை ஒருவாறு அறிந்துகொண்டாள். கடவுளை வழிபடுவது ஒன்றே பிறவிப் பயன் என்று அவர் அந்த இள மங்கைக்கு எடுத்தோதினார். கடவுளிடத்துப் பக்தி பூணுதல், உலகத்தவர்க்குத் தன் கடமைகளைத் திருந்தச் செய்தல் முதலியன அவளுக்குக் கற்பிக்கப்பட்டன. அன்புடன் ஸ்ரீ ராமகிருஷ்ணர் புகட்டிய இம்மேலாம்

எண்ணங்கள் சாரதையின் மனதில் ஆழ்ந்து பதிந்தன. அதற்கெல்லாம் மேலாக அவருடைய தூய அன்புக்குத் தான் பாத்திரமானதை எண்ணி அவள் ஒப்பில்லா உவகை கொண்டிருந்தாள். அவளுடைய வாழ்க்கையில் பெரும் மாறுதல் உண்டாவதற்கு இதுவே முதல் காரணமாயிற்று. தான் பெற்ற அருட்செல்வத்தை மறக்கவும் அவளுக்கு இயலவில்லை. இதைக் குறித்துப் பிற்காலத்தில் ஸ்ரீ சாரதா தேவியார் தம் சிஷ்யர்களுக்குப் பகர்ந்ததாவது:—“அப்போது பேரானந்தம் நிறைந்த பூரண கும்பம் ஒன்று என் உள்ளத்தில் வைக்கப்பட்டதுபோன்று நான் உணர்ந்தேன். அந்த அனுபவம் மாறாது என் மனத்தகத்துக் குடிகொண்டிருந்தது. இந்த ஆனந்தத்தைச் சொல்லால் விளக்குவது எளிதன்று.”

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மூன்று அல்லது நான்கு மாதங்கள் கமார்புகூரில் வந்து தங்கியிருந்தார். பிறகு அவர் பழையபடி தக்ஷிணேசுவரத்துக்குத் திரும்பி விடவே, அவருடைய அருளுக்குரிய நல்லாளும் தன் பெற்றோர் இருப்பிடம் போய்ச் சேர்ந்தாள். முன் போலவே கிராம வாழ்க்கை அமைதியாக நடைபெற்றுக்கொண்டு வந்தது. சாரதை இப்பொழுது பதினெட்டு வயதுடைய இள நங்கையாய்விட்டாள். விவேகமும் முன்னிருந்ததை விடப் பன்மடங்கு அதிகரித்திருந்தது. கணவரைச் சந்தித்து வருஷங்கள் நான்கு ஆய்விட்டனவெனினும், அவர் புகட்டிய உயர்ந்த கருத்துக்கள் மங்கையின் மனதை விட்டு அகலவில்லை. அவளுடைய ஆத்மீய வளர்ச்சி சிறிது சிறிதாக ஓங்குவதாயிற்று. சாந்தமும் அகமுக நோக்கத்துக்கு ஏதுவான சுபாவமும் பெருகலாயின. தன்னைப்பற்றிய சிந்

தனை சிறிதுமில்லாது, பிறர்க்குச் சேவை செய்வதில் விருப்பம் மேலோங்கிற்று. சுகதுக்கங்களுக்கு ஏது வான எல்லாச் சந்தர்ப்பங்களிலும் சலனமடையாத மன நிலை அவளிடத்துக் குடி கொண்டிருந்தது.

தன் தேக சம்பந்தமான யாவையும் மறந்தவளாய் சாரதை மாதா பிதாவின் முன்னிலையில் காலங் கழித்து வந்தாள். அவளது உடல் ஜெயராம்பட்டியில் உலவிக் கொண்டிருக்க, உள்ளம் தக்ஷிணேசுவரத்தில் பர்த்தாவின் அடியிணையை அண்டிக்கொண்டிருந்தது. தனது ஆருயிர்த்துணைவரைத் திரும்பவும் காண வேண்டுமென்ற அவா அடிக்கடி, அவட்கு வந்து விடும். ஆனால் அதை யாரிடத்திலும் அவள் சொல்லுவதில்லை. அடக்கத்தையும் பொறுமையையும் அவள் கடைப்பிடித்து வந்தாள். முதன் முறை சந்தித்த பொழுதே அத்தகைய அன்பும் அனுதாபமும் காட்டியவர் தன்னை ஒருபொழுதும் மறந்துவிட மாட்டார்; தக்க சமயத்தில் அருகில் அழைத்துக் கொள்வார். இங்ஙனம் நினைந்து, அவள் தன் மனதைத் தேற்றிக் கொள்வாள்.

இதற்குள் தன் பர்த்தாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்ற வதந்தி ஊரெங்கும் பரவிற்று. அவளைக் காணுந்தோறும் "சியாமாவின் பெண்ணைப் பைத்தியக்காரனுக்குக் கட்டிக் கொடுத்தார்களே" என்று ஊரார் பரிதாபப்பட ஆரம்பித்தார்கள். ஒருவருக்கும் விளங்காத வார்த்தைகளைச் சாரதையின் புருஷர் பிதற்றுகிறார். சில சமயங்களில் "தாயே, தாயே" என்று சொல்லிக் கொண்டு, தரித்திருக்கும் உடையை நழுவ விட்டு விட்டு நிர்வாணியாகத் திரிகிறார். ஆடுவது, பாடுவது, அசையாது கிடப்பது—இதுபோன்ற

விபரீதச் செயல்களைச் சில வேளைகளில் செய்கிறார். கிராமவாசிகள் இவ்வாறெல்லாம் பேச ஆரம்பித்து விட்டார்கள். அடங்கிய குரலில் "பித்தன் பாரியாள்" என்று சாரதையை அவர்கள் குறிப்பிட்டுவந்தார்கள்.

பாமரருடைய பொருத்தமற்ற பேச்சு சில வேளைகளில் சாரதையின் காதில், வந்து விழும். அவளுக்கோ எதையும் மறுத்துச் சொல்ல நா எழாது. மௌனமாய் சும்மா இருப்பதைத் தவிர வேறு என் செய்வாள்! இப் புன் மொழிகளைக் கேளாதிருத்தற் பொருட்டு அவள் கூடியவரையில் யாருடைய கண்ணுக்கும் தென் படமாட்டாள். தனித்திருந்து ஆற்றவொண்ணு அல்லலில் அழுந்திக்கிடப்பாள். மேலும் மனங்கலங்கித் துன்பம் எய்துவாள். "அவர் முன் இருந்தவாறு இப்பொழுது இல்லை என்பது மெய்யோ? இவர்கள் இயம்புகிறபடி அவர் சித்தப்பிரமை அடைந்திருப்பாரோ? ஒருவேளை தெய்வாதீனமாக அவருக்கு அங்ஙனம் நேர்ந்திருப்பின் நான் இனி இங்குத் தங்குவது தகாதே. அவரது அருகிற் சென்று அடியாளுக்கியன்ற வளவு குற்றேவலன்றே புரியவேண்டும்"—மெல்லியலாள் இங்ஙனம் எண்ணி ஏக்கமுற்றிருந்தாள்.

பெற்ற தாயினிடத்துங் கூடத் தன் துயரத்தை சாரதை வெளியிடவில்லை. மனதுக்குள்ளேயே அதை வைத்துச் சகித்துக் கொண்டிருந்தாள். கடைசியாக தக்ஷிணேசுவரத்துக்குச் சென்று தற்கொண்டாரது நிலைமையை நேரில் காண்பதே உசிதமென்று மாதரசி முடிவுகட்டினுள். தான் என்செய்வது என்பதும் அவரைப் பார்த்தபின்பே தீர்மானிக்கப்படல் வேண்டும் என்றிருந்தாள். புறப்படுவதற்கு ஏற்ற தருணமும் ஒன்று வாய்த்தது. அவளுடைய எட்டிய உறவின

ராகிய மகளிர் சிலர் கங்கா ஸ்நானத்தின்பொருட்டுக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டனர். தனக்கும் அவர்களோடு போக விருப்பமிருப்பதாக அவள் அவர்களிடம் தெரிவித்தாள். இராமச்சந்திர முகோபாத்யாயருக்கு இச் செய்தி எட்டிற்று. புதல்வியின் கருத்தைக் குறிப்பால் அறிந்துகொண்ட பிதா அவளைத் தாமே தக்ஷிணேசுவரத்துக்கு அழைத்துச் செல்ல முன்வந்தார்.

1872-ம் ஆண்டு மார்ச்சு மாத இறுதியில் பயணத்துக்கு நல்ல நாள் ஒன்று குறிப்பிடப்பட்டது. அக்காலத்தில் அப்பக்கங்களிலிருந்து கல்கத்தாவுக்கு இருப்புப் பாதை கிடையாது. வண்டி அல்லது பல்லக்கில் சென்றால் பணச் செலவு அதிகம். குடும்ப வருவாய் அதற்கு இடந் தரவில்லை. எனவே, தந்தையும் மகளும் கால்நடையாகப் புறப்பட்டனர். முதல் இரண்டுநாட் பயணம் இனிது நடைபெற்றது. பார்க்குமிடமெங்கும் நெல்வயலும் தாமரைத் தடாகமும் கண்ணுக்கு விருந்தளித்தன. இளவேனிலின் வெப்பத்தைத் தடுக்க ஆலமரங்கள் ஆங்காங்கு தென்பட்டன. ஆனால் அவர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக மூன்றாம்நாள் பிரயாணத்துக்கு ஒரு விக்கினம் விளைந்தது. தொடர்ந்து நெடுந்தூரம் நடக்கும் பழக்கத்தைக் குலமகள் சாரதை இது பரியந்தம் பெற்றிருந்தாளில்லை. ஆயாசத்தால் அவளுக்கு ஜுரம் வந்துவிட்டது. எனவே அவர்கள் ஒரு சத்திரத்தில் தாமதிக்க நேரிட்டது. உடல் நலன் பெறுமுன் புறப்படுவது உசிதமன்று. விரைந்து செல்ல விரும்பிய மாது தங்களுக்கு உற்ற தடையை எண்ணித் தவித்திருந்தாள். ஆயினும் அவ்வல்லலுக் கிடையில் ஆறுதல் அளிக்கும் காட்சியொன்றைக் கற்பழகி காணலானாள். அதைப்பற்றி அவள் பிற்காலத்தில் பகர்ந்த

தாவது:—"நான் பிரக்ஞை யிழந்தவளாய்ப் படுக்கையில் படுத்துக் கிடந்தேன். அப்பொழுது இள மங்கை யொருத்தி எனதருகில் வந்து உட்கார்ந்தாள். கார் வண்ண மேனியள் எனினும் அவளுடைய கட்டழகை என்னென்பது! நான் என்றைக்கும் மறவா வண்ணம் அவளுடைய திருவுருவம் என் மனதிற் படிந்தது. அண்டையில் அமர்ந்த அவள் தன் மெல்லிய குளிர்ந்த கரத்தால் என் சிரசைத் தடவினாள். அதன் பயனாக என்னை வாட்டிய வலியும் வெப்ப நோயும் உடனே நீங்கலாயின. நோயுற்றுக் கிடந்த எனக்கு ஆறுதலும் அமைதியும் உண்டாயின. 'அக்கா, நீ எங்கிருந்து வருகிறாய்?' என்று நான் அவளைக் கேட்டேன்.

"'தக்ஷிணேசுவரத்திலிருந்து வருகிறேன்' என்றாள் காட்சியில் தென்பட்டவள். பேச முடியாதவாறு எனக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று. மேலும் நான் பகர்ந்ததாவது :

"'தக்ஷிணேசுவரத்திலிருந்தா! நான் அங்குச் சென்று என் கணவரைக்காண ஆவலுற்றிருக்கிறேன். ஆனால் இப்பிணி என் இச்சைக்கு இடைஞ்சல் விளைவித்து விட்டது.'

"'கவலைப்படாதே. நீ விரைவில் குணமடைந்து தக்ஷிணேசுவரம் ஏகி உன் கணவனைக் காண்பாய். அவன் என் பக்தன்.'

"'அப்படியானால் நீ யாரோ?' என்று கேட்டேன்.

"'நான் தக்ஷிணேசுவரத்தில் வீற்றிருப்பவள். உன் கணவனைக் காத்தருள்பவளும் நானே,' என்றாள் தெய்வத்தன்மை வாய்க்கப்பெற்ற அம்மாது.

"'ஆகையினால் அல்லவோ நீ கிருபை கூர்ந்து என்னிடத்தில் வந்துள்ளாய்,' என்று நான் அவளுக்கு நன்றி கூறிவிட்டு நித்திரை போய்விட்டேன்."

ஆத்மஞானத்துக்கு ஏதுவான உபதேசங்களை ஸ்ரீராமகிருஷ்ணரிடமிருந்து தனக்கு வயது பதினுன்கு ஆயிருந்தபொழுதே சாரதாமணி பெற்றிருந்தாளெனினும், இதுவே அவளுடைய முதலாய ஆத்மீய அனுபவம் என்று சொல்லவேண்டும்.

அந்தணர் இராமச்சந்திர முகோபாத்யாயர் அதிகாலையில் எழுந்திருந்தார். தமது புதல்வி குணமடைந்து நலமுற்றிருப்பதைக் கண்டார். இனி வசதியில்லாத சத்திரத்தில் வீணுய்த் தங்கியிருப்பதில் பயனில்லை என்றெண்ணி, மேலும் வழிநடக்க ஆரம்பித்தார். அவர்கள் கொஞ்சதூரம் போனதும் சிவிகையொன்று சொற்ப வாடகைக்கு அகப்பட்டது. சாரதையும் அதில் ஊர்ந்து தக்ஷிணேசுவரம் போய்க்கொண்டிருந்தாள். வழியில் அவளுக்கு மறுபடியும் காய்ச்சல் வந்தது. ஆனால் அது சாமான்யமானதால் அதைப்பற்றி அவள் தந்தையிடம் ஒன்றும் பகரவில்லை. சிறிது சிறிதாக வழியைக் கடந்து இரவு ஒன்பது மணிக்குத் தந்தையும் மகளும் தக்ஷிணேசுவரம் போய்ச் சேர்ந்தனர்.

மாமியார் சந்திராதேவி வசித்திருந்த சிற்றறைக்குப் போவதற்குப் பதிலாக, தன் பர்த்தாவை முதலில் தரிசிக்குமாறு அவள் நேராக அவரிருக்குமிடம் சென்றுள். எத்தகைய வரவேற்பு அவளுக்காகக் காத்துக் கொண்டிருந்தது! அது சாரதா தேவியின் சொந்த மொழியிலேயே வெளியாவது நன்று:—“நான் அவருடைய திருவடிகளில் சென்று வணங்கினேன். ‘ஆ, வந்துவிட்டாயா ! மிக நன்று’ என்றுர் அவர். தரையில் எனக்கு ஒரு பாய் விரிக்கும்படி அங்கிருந்தவர்களிடம் அவர் சொன்னுர். ‘மதுராநாதர் இப்பொழுது உயிரோ

டிருந்திருப்பாராயின் உனக்கு எவ்வளவு செளகரியம் செய்து வைத்திருப்பார்!' என்று இயம்பிச் சிறிது வருந்தினர். ஆனால் எனக்கோ அவருடைய கருணை ஒன்றே போதுமானதாயிற்று. வேறு எதையும் நான் உலகில் எதிர்பார்க்கவில்லை."

தமது அருளுக்குரியாள் வெப்ப நோயால் இன்னும் சிறிது வருந்துகிறாள் என்றறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அதுபற்றிக் கொஞ்சம் கவலையுற்றிருந்தார். தம்மிடம் அடைக்கலம் புகுந்த இளம் மாது செளகரியமாக வீற்றிருப்பதற்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்து வைத்தார். மறுநாளே மருத்துவர் ஒருவரை வரவழைத்து வேண்டிய சிகிச்சைகளையும் கையாண்டார். நான்கு நாளைக்குள் ஜுரம் சிறிதுமின்றி சொஸ்தமானது. ஆனால் அவளுடைய உடலுக்கு உண்டான நலன் அவ்வளவு பெரியதன்று; உள்ளத்தில் உண்டான ஆறுதலே ஒப்பற்றதாகும். இதுபரியந்தம் பெரும் பீதியொன்று அவளுடைய மனதை வாட்டி வந்தது. பர்த்தாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்று ஊரார் கிளப்பிய வதந்தியால் அவள் தாங்கவொண்ணுத் துயருற்றிருந்தாள். அந்த ஐயம் இப்பொழுது அறவே அகன்றது. அவர் அவளை மறக்கவுமில்லை; மனதில் அவருக்குக் கோளாறு ஒன்றும் ஏற்படவுமில்லை. அவர் தன்னை எத்தகைய அன்போடு பாராட்டுகிறார் என்பதை நாரி நேரில் காண்கிறாள். முன் இருந்தவாறே அவர் இப்பொழுதும் முழு முனிவராகவும் கரை காணுக் கருணையுடையவராகவும் இருப்பதை அறிகிறாள். தனக்குத் துணைபுரியப் பெற்ற தாய்க்கு ஒப்பாகிய மாமியார் ஒரு புறமும், தன்னைக் காத்தருளுதற்குக் கொண்ட கணவர் மற்றொருபுறமும் இருப்ப

தைக் கண்டு கவலை யொழிகிருள். தன்னைப் பொறுத்த வரையில் இனி ஆயுள் முழுதும் அத்தூய கொழுநர்க் குத் திருப்பணி யாற்றுதலே தன் கடமை யென்று உறுதி பூணுகிருள். இராமச் சந்திர முகோபாத்யாய ரும் தம் மகள் அன்புடன் மருமகரால் வரவேற்கப்பட் டதைப் பார்த்து மகிழ்வுற்ருர். மகளும் மாமியாரோ டும் தற்கொண்டாரோடும் இன்புற்றிருந்தது அவருக் குப் பரம திருப்தியை உண்டு பண்ணிற்று. இனி அவ ளுடைய பிற்கால வாழ்க்கையைப்பற்றித் தாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை யென்று சமாதான மடைந்த பிராமணர் சில நாள் பொறுத்துத் தம் கிரா மத்தை நோக்கிப் புறப்பட்டார்.



நான்காம் அத்தியாயம்

## பத்தாவுக்கு ஏற்ற பதிவிரதை

மேலோர் ஒருவருடைய மனநிலையை வெளிப் படுத்துதற்கு நெருக்கடியான சந்தர்ப்பங்கள் பெரிதும் பயன்படுகின்றன. ஆயுள் முழுதும் கடுந்தவம் புரியத் துணிந்துள்ள துறவி யொருவரது அருகில் அவரை மணந்த இளம் மனையாள் ஒருத்தி அணுகுவதாக வைத் துக்கொள்வோம். தனக்குரிய இல்லறக் கடமைகளைச் செய்யும்படி அத்துறவியரைத் தூண்டுவது ஒருவேளை அவளுடைய நோக்கமா யிருக்கலாம். முனிவரோ முற் றத் துறந்தவராயிருந்தால் அத்தையலின் சொல்கேளார்; அவள் மீண்டும் தம்மை அணுக இயலாதபடி விலகிக் கொள்வார். போதிய அளவு மனபரிபாகம் அவரிடத்து

இல்லாது போமாயின் சிறிது சிறிதாக அவர் அவளுடைய வசத்துக்கு உட்படுவார். அறவே விலகியிருப்பது, அல்லது ஆசைவலையில் படுவது ஆகிய இருவிதச் செயல்களும் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் உலகில் பல தடவைகளில் நேர்ந்திருக்கின்றன. ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் இயல்பு இந்த இரண்டு போக்குகளிலும் அடங்காததாயிருந்தது. அவர் செயலில் தனிச்சிறப்பு ஒன்று விளங்கிற்று. இல்லாளை அவர் அன்புடன் வரவேற்றார்; அதைத் தொடர்ந்து நிகழ்ந்த இரண்டு செயல்களும் உலகத்தவர்க்குப் பெருநன்மை விளைவிப்பனவாயின. முதலாவதாக, தாம் கடைப்பிடித்த உயர்ந்த லட்சியத்தையே தம் தர்மபத்தினிக்கும் புகட்டத் தொடங்கினார்; இக்கடமையை ஆற்றுதற்காக அவர் அவளோடு கூடிவாழ்ந்த வாழ்க்கை தாம் அடைந்துள்ள மனப்பரிபாகத்தைச் சோதிக்கவும் பயன்பட்டது. இரண்டாவதாக அவ்வாழ்க்கையின் பயனாக, ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஞான வாழ்க்கை உலகுக்கு எவ்வளவு பயன்பட்டதோ அவ்வளவு பயன் ஸ்ரீ சாரதா தேவியாரின் வாழ்க்கையினின்றும் உண்டாயிற்று.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவாகம் பண்ணியிருந்ததைக் கேள்விப்பட்ட அவருடைய குருநாதர் தோதாபுரி எனும் பெரியார் அதைப்பற்றி ஆக்ஷேபம் ஒன்றும் செய்யவில்லை. பிரம்மஞானத்தில் நிலைபெற்றவர்க்குப் பெண் ஒருத்தியால் பாதகம் ஏற்படுவதில்லை. சாதன தசையில் இருப்பவரே ஆண் பெண் வேற்றுமையை முறையாகக் கவனித்து ஒழுகவேண்டும். ஆனால் பிரம்மஞானியோ இந்தவேற்றுமை யுணர்ச்சியைக் கடந்தவனாகிறான். சிறு பாலகனைப்போன்று அவன் ஆய்விடுகிறான். ஆண் என்பதும் பெண் என்பதும் அவன் காணும்

காட்சியில் இல்லை. அவனுக்கு அனைத்தும் ஒரே பிரம்ம சொரூபம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடைந்திருந்த அந்த அத்வைத சித்தியைப் பரீக்ஷை பண்ணுதற்கு ஸ்ரீ சாரதா தேவியார் தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்ததே தக்கதொரு சந்தர்ப்பமாயிற்று. எதையும் அரைகுறை யாகச் செய்வது அவருடைய பழக்கமன்று. தமது மனதை அலசிப்பார்க்க அவர் தீர்மானித்தார்; உடனே தீவிரமாக அதில் பிரவேசித்தார். சாதாரணமாயுள்ள துறவு நெறிக்கு மாறாகத் தம் மனையாள் தம்மோடு வசிக்கவும் தமக்குக் குற்றேவல் புரியவும் ஸ்ரீ ராம கிருஷ்ணர் இடம் கொடுத்தார். அத்துடன் நின்றுவிடாது ஆறுமாத காலம் தமதருகில் படுத்துறங்கவும் அவட்கு அனுமதி கொடுத்தார்.

இளம் மங்கையரது முன்னிலையில் முனிவர்களுடைய மனமே கலைந்து விடும்போது மற்றவர்களைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமில்லை. எத்தனையோ ரிஷி புங்கவர்கள் அக்காரணத்தால் தவநெறியினின்று தவறியிருக்கின்றனர். இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தமது மனதை அத்தகைய சோதனைக்கு உட்படுத்தினார். ஓர் இரவு தமது பாரியாள் பக்கத்தில் படுத்துறங்கிக்கொண்டிருந்தபோது அவர் தமது மனதுக்கு இவ்வாறு சொல்லுவாராயினர்—“ஓ மனமே, போகத்துக்கு உரியதென்று உலகம் போற்றும் பெண்ணின் உடலம் இதோ உன் கைவசமிருக்கிறது. ஆனால் இதன் மீது இச்சை வைப்பவர் கடவுளைக்காண வல்லவர் ஆகார். இப்பொழுது மனமே, நீ உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாதே. உள்ளதை உள்ளபடி இயம்பி விடு. நீ வேண்டுவது இம்மங்கையின் மேனியா, அல்லது மெய்ப்பொருளாகிய கடவுளா? முன்னையதாயின்

இல்லாது போமாயின் சிறிது சிறிதாக அவர் அவளு டைய வசத்துக்கு உட்படுவார். அறவே விலகியிருப் பது, அல்லது ஆசைவலையில் படுவது ஆகிய இருவிதச் செயல்களும் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் உலகில் பல தடவைகளில் நேர்ந்திருக்கின்றன. ஆனால் ஸ்ரீ ராம கிருஷ்ணரின் இயல்பு இந்த இரண்டு போக்குகளிலும் அடங்காததாயிருந்தது. அவர் செயலில் தனிச்சிறப்பு ஒன்று விளங்கிற்று. இல்லாளை அவர் அன்புடன் வர வேற்றார்; அதைத் தொடர்ந்து நிகழ்ந்த இரண்டு செயல்களும் உலகத்தவர்க்குப் பெருநன்மை விளைவிப் பனவாயின. முதலாவதாக, தாம் கடைப்பிடித்த உயர்ந்த லட்சியத்தையே தம் தர்மபத்தினிக்கும் புகட் டத் தொடங்கினார்; இக்கடமையை ஆற்றுதற்காக அவர் அவளோடு கூடிவாழ்ந்த வாழ்க்கை தாம் அடைந் துள்ள மனப்பரிபாகத்தைச் சோதிக்கவும் பயன்பட்டது. இரண்டாவதாக அவ்வாழ்க்கையின் பயனாக, ஸ்ரீ ராம கிருஷ்ணருடைய ஞான வாழ்க்கை உலகுக்கு எவ்வளவு பயன்பட்டதோ அவ்வளவு பயன் ஸ்ரீ சாரதா தேவியா ரின் வாழ்க்கையினின்றும் உண்டாயிற்று.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவாகம் பண்ணியிருந்ததைக் கேள்விப்பட்ட அவருடைய குருநாதர் தோதாபுரி எனும் பெரியார் அதைப்பற்றி ஆக்ஷேபம் ஒன்றும் செய்யவில்லை. பிரம்மஞானத்தில் நிலைபெற்றவர்க்குப் பெண் ஒருத்தியால் பாதகம் ஏற்படுவதில்லை. சாதன தசையில் இருப்பவரே ஆண் பெண் வேற்றுமையை முறையாகக் கவனித்து ஒழுகவேண்டும். ஆனால் பிரம்ம ஞானியோ இந்தவேற்றுமை யுணர்ச்சியைக் கடந்தவனா கிறான். சிறு பாலகனைப்போன்று அவன் ஆய்விடுகிறான். ஆண் என்பதும் பெண் என்பதும் அவன் காணும்

காட்சியில் இல்லை. அவனுக்கு அனைத்தும் ஒரே பிரம்ம சொரூபம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடைந்திருந்த அந்த அத்வைத சித்தியைப் பரீக்ஷை பண்ணுதற்கு ஸ்ரீ சாரதா தேவியார் தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்தது தக்கதொரு சந்தர்ப்பமாயிற்று. எதையும் அரைகுறையாகச் செய்வது அவருடைய பழக்கமன்று. தமது மனதை அலசிப்பார்க்க அவர் தீர்மானித்தார்; உடனே தீவிரமாக அதில் பிரவேசித்தார். சாதாரணமாயுள்ள துறவு நெறிக்கு மாறாகத் தம் மனையாள் தம்மோடு வசிக்கவும் தமக்குக் குற்றேவல் புரியவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இடம் கொடுத்தார். அத்துடன் நின்றுவிடாது ஆறுமாத காலம் தமதருகில் படுத்துறங்கவும் அவட்கு அனுமதி கொடுத்தார்.

இளம் மங்கையரது முன்னிலையில் முனிவர்களுடைய மனதே கலைந்து விடும்போது மற்றவர்களைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமில்லை. எத்தனையோ ரிஷி புங்கவர்கள் அக்காரணத்தால் தவநெறியினின்று தவறியிருக்கின்றனர். இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தமது மனதை அத்தகைய சோதனைக்கு உட்படுத்தினார். ஓர் இரவு தமது பாரியாள் பக்கத்தில் படுத்துறங்கிக்கொண்டிருந்தபோது அவர் தமது மனதுக்கு இவ்வாறு சொல்லுவாராயினர்—“ ஓ மனமே, போகத்துக்கு உரியதென்று உலகம் போற்றும் பெண்ணின் உடலம் இதோ உன் கைவசமிருக்கிறது. ஆனால் இதன் மீது இச்சை வைப்பவர் கடவுளைக்காண வல்லவர் ஆகார். இப்பொழுது மனமே, நீ உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாதே. உள்ளதை உள்ளபடி இயம்பிவிடு. நீ வேண்டுவது இம்மங்கையின் மேனியா, அல்லது மெய்ப்பொருளாகிய கடவுளா? முன்னையதாயின்

தாவது:—“நான் பிரக்ஞை யிழந்தவளாய்ப் படுக்கையில் படுத்துக் கிடந்தேன். அப்பொழுது இள மங்கை யொருத்தி எனதருகில் வந்து உட்கார்ந்தாள். கார் வண்ண மேனியள் எனினும் அவளுடைய கட்டழகை என்னென்பது! நான் என்றைக்கும் மறவா வண்ணம் அவளுடைய திருவுருவம் என் மனதிற் படிந்தது. அண்டையில் அமர்ந்த அவள் தன் மெல்லிய குளிர்ந்த கரத்தால் என் சிரசைத் தடவினள். அதன் பயனாக என்னை வாட்டிய வலியும் வெப்ப நோயும் உடனே நீங்கலாயின. நோயுற்றுக் கிடந்த எனக்கு ஆறுதலும் அமைதியும் உண்டாயின. ‘அக்கா, நீ எங்கிருந்து வருகிறாய்?’ என்று நான் அவளைக் கேட்டேன்.

“ ‘தக்ஷிணேசுவரத்திலிருந்து வருகிறேன்’ என்றாள் காட்சியில் தென்பட்டவள். பேச முடியாதவாறு எனக்குப் பெரு வியப்பு உண்டாயிற்று. மேலும் நான் பகர்ந்ததாவது:

“ ‘தக்ஷிணேசுவரத்திலிருந்தா! நான் அங்குச் சென்று என் கணவரைக்காண ஆவலுற்றிருக்கிறேன். ஆனால் இப்பிணி என் இச்சைக்கு இடைஞ்சல் விளைவித்து விட்டது.’

“ ‘கவலைப்படாதே. நீ விரைவில் குணமடைந்து தக்ஷிணேசுவரம் ஏகி உன் கணவனைக் காண்பாய். அவன் என் பக்தன்.’

“ ‘அப்படியானால் நீ யாரோ?’ என்று கேட்டேன்.

“ ‘நான் தக்ஷிணேசுவரத்தில் வீற்றிருப்பவள். உன் கணவனைக் காத்தருள்பவளும் நானே,’ என்றாள் தெய்வத்தன்மை வாய்க்கப்பெற்ற அம்மாது.

“ ‘ஆகையினால் அல்லவோ நீ கிருபை கூர்ந்து என்னிடத்தில் வந்துள்ளாய்,’ என்று நான் அவளுக்கு நன்றி கூறிவிட்டு நித்திரை போய்விட்டேன்.”

ஆத்மஞானத்துக்கு ஏதுவான உபதேசங்களை ஸ்ரீராமகிருஷ்ணரிடமிருந்து தனக்கு வயது பதினன்கு ஆயிருந்தபொழுதே சாரதாமணி பெற்றிருந்தாளெனி னும், இதுவே அவளுடைய முதலாய ஆத்மீய அனுப வம் என்று சொல்லவேண்டும்.

அந்தணர் இராமச்சந்திர முகோபாத்யாயர் அதிகாலையில் எழுந்திருந்தார். தமது புதல்வி குண மடைந்து நலமுற்றிருப்பதைக் கண்டார். இனி வசதி யில்லாத சத்திரத்தில் வீணய்த் தங்கியிருப்பதில் பய னில்லை என்றெண்ணி, மேலும் வழிநடக்க ஆரம்பித் தார். அவர்கள் கொஞ்சதூரம் போனதும் சிவிகை யொன்று சொற்ப வாடகைக்கு அகப்பட்டது. சார தையும் அதில் ஊர்ந்து தக்ஷிணேசுவரம் போய்க் கொண்டிருந்தாள். வழியில் அவளுக்கு மறுபடியும் காய்ச்சல் வந்தது. ஆனல் அது சாமான்யமானதால் அதைப்பற்றி அவள் தந்தையிடம் ஒன்றும் பகரவில்லை. சிறிது சிறிதாக வழியைக் கடந்து இரவு ஒன்பது மணிக்குத் தந்தையும் மகளும் தக்ஷிணேசுவரம் போய்ச் சேர்ந்தனர்.

மாமியார் சந்திராதேவி வசித்திருந்த சிற்றறைக் குப் போவதற்குப் பதிலாக, தன் பர்த்தாவை முதலில் தரிசிக்குமாறு அவள் நேராக அவரிருக்குமிடம் சென் றாள். எத்தகைய வரவேற்பு அவளுக்காகக் காத்துக் கொண்டிருந்தது! அது சாரதா தேவியின் சொந்த மொழியிலேயே வெளியாவது நன்று:—“நான் அவ ருடைய திருவடிகளில் சென்று வணங்கினேன். ‘ஆ, வந்துவிட்டாயா! மிக நன்று’ என்றார் அவர். தரையில் எனக்கு ஒரு பாய் விரிக்கும்படி அங்கிருந்தவர்களிடம் அவர் சொன்னர். ‘மதுரநாதர் இப்பொழுது உயிரோ

டிருந்திருப்பாராயின் உனக்கு எவ்வளவு சௌகரியம் செய்து வைத்திருப்பார்!' என்று இயம்பிச் சிறிது வருந்தினார். ஆனால் எனக்கோ அவருடைய கருணை ஒன்றே போதுமானதாயிற்று. வேறு எதையும் நான் உலகில் எதிர்பார்க்கவில்லை."

தமது அருளுக்குரியாள் வெப்ப நோயால் இன்னும் சிறிது வருந்துகிறாள் என்றறிந்த ஸ்ரீராமகிருஷ்ணர் அதுபற்றிக் கொஞ்சம் கவலையுற்றிருந்தார். தம்மிடம் அடைக்கலம் புகுந்த இளம் மாது சௌகரியமாக வீற்றிருப்பதற்கு ஏற்ற ஏற்பாடுகளைச் செய்து வைத்தார். மறுநாளே மருத்துவர் ஒருவரை வரவழைத்து வேண்டிய சிகிச்சைகளையும் கையாண்டார். நான்கு நாளைக்குள் ஜுரம் சிறிதுமின்றி சொஸ்தமானது. ஆனால் அவளுடைய உடலுக்கு உண்டான நலன் அவ்வளவு பெரியதன்று; உள்ளத்தில் உண்டான ஆறுதலே ஒப்பற்றதாகும். இதுபரியந்தம் பெரும் பீதியொன்று அவளுடைய மனதை வாட்டி வந்தது. பர்த்தாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்று ஊரார் கிளப்பிய வதந்தியால் அவள் தாங்கவொண்ணாத் துயருற்றிருந்தாள். அந்த ஐயம் இப்பொழுது அறவே அகன்றது. அவர் அவளை மறக்கவுமில்லை; மனதில் அவருக்குக் கோளாறு ஒன்றும் ஏற்படவுமில்லை. அவர் தன்னை எத்தகைய அன்போடு பாராட்டுகிறார் என்பதை நாரி நேரில் காண்கிறாள். முன் இருந்தவாறே அவர் இப்பொழுதும் முழு முனிவராகவும் கரை காணாக் கருணையுடையவராகவும் இருப்பதை அறிகிறாள். தனக்குத் துணைபுரியப் பெற்ற தாய்க்கு ஒப்பாகிய மாமியார் ஒரு புறமும், தன்னைக் காத்தருளுதற்குக் கொண்ட கணவர் மற்றொருபுறமும் இருப்ப

தைக் கண்டு கவலை யொழிகிறாள். தன்னைப் பொறுத்த வரையில் இனி ஆயுள் முழுதும் அத்தூய கொழுநர்க்குத் திருப்பணி யாற்றுதலே தன் கடமை யென்று உறுதி பூணுகிறாள். இராமச் சந்திர முகோபாத்யாயரும் தம் மகள் அன்புடன் மருமகரால் வரவேற்கப்பட்டதைப் பார்த்து மகிழ்வுற்றார். மகளும் மாமியாரோடும் தற்கொண்டாரோடும் இன்புற்றிருந்தது அவருக்குப் பரம திருப்தியை உண்டு பண்ணிற்று. இனி அவளுடைய பிற்கால வாழ்க்கையைப்பற்றித் தாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை யென்று சமாதானமடைந்த பிராமணர் சில நாள் பொறுத்துத் தம் கிராமத்தை நோக்கிப் புறப்பட்டார்.



நான்காம் அத்தியாயம்

# பத்தாவுக்கு ஏற்ற பதிவிரதை

மேலோர் ஒருவருடைய மனநிலையை வெளிப்படுத்துதற்கு நெருக்கடியான சந்தர்ப்பங்கள் பெரிதும் பயன்படுகின்றன. ஆயுள் முழுதும் கடுந்தவம் புரியத் துணிந்துள்ள துறவி யொருவரது அருகில் அவரை மணந்த இளம் மனையாள் ஒருத்தி அணுகுவதாக வைத்துக்கொள்வோம். தனக்குரிய இல்லறக் கடமைகளைச் செய்யும்படி அத்துறவியரைத் தூண்டுவது ஒருவேளை அவளுடைய நோக்கமா யிருக்கலாம். முனிவரோ முற்றத் துறந்தவராயிருந்தால் அத்தையலின் சொல்கேளார்; அவள் மீண்டும் தம்மை அணுக இயலாதபடி விலகிக் கொள்வார். போதிய அளவு மனபரிபாகம் அவரிடத்து

இல்லாது போமாயின் சிறிது சிறிதாக அவர் அவளுடைய வசத்துக்கு உட்படுவார். அறவே விலகியிருப்பது, அல்லது ஆசைவலையில் படுவது ஆகிய இருவிதச் செயல்களும் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் உலகில் பல தடவைகளில் நேர்ந்திருக்கின்றன. ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் இயல்பு இந்த இரண்டு போக்குகளிலும் அடங்காததாயிருந்தது. அவர் செயலில் தனிச்சிறப்பு ஒன்று விளங்கிற்று. இல்லாளை அவர் அன்புடன் வரவேற்றார்; அதைத் தொடர்ந்து நிகழ்ந்த இரண்டு செயல்களும் உலகத்தவர்க்குப் பெருநன்மை விளைவிப்பனவாயின. முதலாவதாக, தாம் கடைப்பிடித்த உயர்ந்த லட்சியத்தையே தம் தர்மபத்தினிக்கும் புகட்டத் தொடங்கினர்; இக்கடமையை ஆற்றுதற்காக அவர் அவளோடு கூடிவாழ்ந்த வாழ்க்கை தாம் அடைந்துள்ள மனப்பரிபாகத்தைச் சோதிக்கவும் பயன்பட்டது. இரண்டாவதாக அவ்வாழ்க்கையின் பயனாக, ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஞான வாழ்க்கை உலகுக்கு எவ்வளவு பயன்பட்டதோ அவ்வளவு பயன் ஸ்ரீ சாரதா தேவியாரின் வாழ்க்கையினின்றும் உண்டாயிற்று.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவாகம் பண்ணியிருந்ததைக் கேள்விப்பட்ட அவருடைய குருநாதர் தோதாபுரி எனும் பெரியார் அதைப்பற்றி ஆக்ஷேபம் ஒன்றும் செய்யவில்லை. பிரம்மஞானத்தில் நிலைபெற்றவர்க்குப் பெண் ஒருத்தியால் பாதகம் ஏற்படுவதில்லை. சாதனதசையில் இருப்பவரே ஆண் பெண் வேற்றுமையை முறையாகக் கவனித்து ஒழுகவேண்டும். ஆனால் பிரம்மஞானியோ இந்தவேற்றுமை யுணர்ச்சியைக் கடந்தவனாகிறான். சிறு பாலகனைப்போன்று அவன் ஆய்விடுகிறான். ஆண் என்பதும் பெண் என்பதும் அவன் காணும்

காட்சியில் இல்லை. அவனுக்கு அனைத்தும் ஒரே பிரம்ம சொரூபம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடைந்திருந்த அந்த அத்வைத சித்தியைப் பரீக்ஷை பண்ணுதற்கு ஸ்ரீ சாரதா தேவியார் தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்ததே தக்கதொரு சந்தர்ப்பமாயிற்று. எதையும் அரைகுறையாகச் செய்வது அவருடைய பழக்கமன்று. தமது மனதை அலசிப்பார்க்க அவர் தீர்மானித்தார்; உடனே தீவிரமாக அதில் பிரவேசித்தார். சாதாரணமாயுள்ள துறவு நெறிக்கு மாறாகத் தம் மனையாள் தம்மோடு வசிக்கவும் தமக்குக் குற்றேவல் புரியவும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இடம் கொடுத்தார். அத்துடன் நின்றுவிடாது ஆறுமாத காலம் தமதருகில் படுத்துறங்கவும் அவட்கு அனுமதி கொடுத்தார்.

இளம் மங்கையரது முன்னிலையில் முனிவர்களுடைய மனதே கலைந்து விடும்போது மற்றவர்களைப் பற்றிப் பேசவேண்டிய அவசியமில்லை. எத்தனையோ ரிஷி புங்கவர்கள் அக்காரணத்தால் தவநெறியினின்று தவறியிருக்கின்றனர். இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தமது மனதை அத்தகைய சோதனைக்கு உட்படுத்தினர். ஓர் இரவு தமது பாரியாள் பக்கத்தில் படுத்துறங்கிக்கொண்டிருந்தபோது அவர் தமது மனதுக்கு இவ்வாறு சொல்லுவாராயினர்—" ஓ மனமே, போகத்துக்கு உரியதென்று உலகம் போற்றும் பெண்ணின் உடலம் இதோ உன் கைவசமிருக்கிறது. ஆனல் இதன் மீது இச்சை வைப்பவர் கடவுளைக்காண வல்லவர் ஆகார். இப்பொழுது மனமே, நீ உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாதே. உள்ளதை உள்ளபடி இயம்பி விடு. நீ வேண்டுவது இம்மங்கையின் மேனியா, அல்லது மெய்ப்பொருளாகிய கடவுளா? முன்னையதாயின்

இதோ ஏற்றுக்கொள்." இப்படி இயம்பிக் கொண்டே அவர் ஸ்ரீ சாரதா தேவியார்மீது நாட்டுதற்குக் கையைத் தூக்கினர். அவ்வமயம் அவ்வினவிற்கு விடையாக அவருடைய மனதின் மேலாம் தன்மையிலிருந்து கிளம்பியது யாது? பகைகண்ட மாத்திரத்தில் ஆமையொன்று அவயவங்களைத் தன்னுள் சுருக்கிக் கொள்வது போன்று, அவருடைய மனது தானகவே சமாதி நிலையடைந்து, இறைவனுடைய சன்னிதியைச் சார்ந்து விட்டது. இரவெல்லாம் அத்தகைய யோகத்திலேயே அவர் நிலைத்து விட்டார். மறுநாள் நெடுநேரம் இறைவனுடைய திருநாமம் காதில் உச்சரிக்கப் பட்ட பின்பே அவருக்கு உடல் நினைவு வந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மனப்பாங்கை விளக்க வல்ல மற்றொரு சம்பவமும் நேர்ந்தது. ஒரு நாள் அவர் தம் அறையில் மஞ்சத்தில் சாய்ந்து கொண்டிருக்கையில் சாரதா அவருக்கு விசிறி வீசிக் கொண்டிருந்தாள். அப்பொழுது கட்டழகு வாய்ந்த அக்காரிகை தன் கணவரை நோக்கி "நீங்கள் என்னை எவ்வாறு கருதுகின்றீர்கள்?" என்று கேட்டாள். அதற்கு அவர் "இங்கு ஆலயத்தின்கண் எழுந்தருளி யிருக்கும் ஜகன்மாதாவே ஒரு வடிவெடுத்து என்னை ஈன்று வளர்த்தாள். இப்பொழுது மற்றொரு வடிவெடுத்து எனக்குக் குற்றேவல் புரிகின்றாள். பெண்ணுலகு அனைத்தும் பராசக்தியின் வடிவு எனும் உண்மை என் மனதினின்று மறைவதில்லை" என்றார். இந்திரிய போகத்தில் கட்டுண்டு கிடப்பவர்க்கு இக்கூற்றின் உட்பொருள் விளங்குவது எளிதன்று. ஆனல் இத்தகைய திருக் காட்சியே ஸ்ரீ ராமகிருஷ்ணரது புனித வாழ்க்கைக்கு ஆதாரமாயிற்று.

நன் மக்களைப் பெற்று வளர்க்கும் பேறு சாரதா வுக்கு வாய்க்க வில்லை யென்று அவளிடத்துப் பலர் அனுதாபம் காட்டினார்கள். ஏனெனில் இல்லறம் பூணும் பெண் ஒருத்தி இம்மையில் இன்புறுவது மக்கட் பேற்றினா லன்றோ? சில குழந்தைகட்குத் தாயாயிலங்குதற்கு ஒப்பாகிய மகிழ்வு வேறு எதுவும் அவட்கு இல்லை. சாரதையின் கணவர் தவ நெறி பூண்டது அத்தகைய இன்பத்துக்கு இடைஞ்ச லாயிற்று. அங்ஙனம் அவளிடத்து அனுதாபம் காட்டியவர்களுள் அவளது தாய் ஸ்ரீமதி சியாமா சுந்தரி தேவியும் ஒருவர் ஆனார். அவ்வம்மையார் தக்கதொரு தருணத்தில் தமது மருகர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் காதில் விழும்படி அந்தப் புரத்திலிருந்து உரக்கப் பகர்ந்ததாவது:—"என் குழந்தை சாரதையைப் பித்தன் ஒருவனுக்குக் கட்டிக் கொடுத்து விட்டேன் என்று உலகம் குறை கூறுகிறது. இல்வாழ்க்கையின் இன்பத்தை அவள் அறிந்திலள்; ஆதலால் புத்திரபாக்கியத்தை அவள் பெறமாட்டாளே. 'அம்மா' வென்று குழந்தை கூவும் மழலைச் சொல் கேட்டு இன்புறும் பேறு அவளுக்கேது?" இதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் புன்னகை பூத்தவராய் "அதைப் பற்றிய கவலை தங்களுக்கு வேண்டாம். கணக்கற்ற அருட் செல்வர்களும் செல்வியரும் அவளைத் 'தாயே' என்று அழைக்கும் ஒலி ஓயாது பிற்காலத்தில் அவள் காதில் விழுந்த வண்ணமாயிருக்கும்" என்றார்.

வாழ்க்கையில் உண்டாகும் குறையும் நிறையும் அவரவர் மனநிலையைப் பொறுத்தன வாகும். மக்கட் பேறு வாய்க்கவில்லை யென்று அனுதாபம் காட்டியவர்களை ஒருபுறம் ஒதுக்கி வைத்து விட்டு, ஸ்ரீ சாரதா

தேவியார் தமது இல்வாழ்க்கையைப் பற்றி எவ்வாறு கருதினார் என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். தமது கணவரோடு தாம் கழித்த நல் நாட்களைப் பற்றிப் பேருவகையோடு அவர் பிற்காலத்தில் பகர்ந்த தாவது :—“ நம்மை ஆட்கொண்ட அண்ணல் ஓயாது பரவச நிலையிலேயே மூழ்கியிருப்பார். அதைச் சொல் லால் விளக்குவதும் சாத்தியமன்று. அருட் பிழம்பில் ஆழ்ந்திருந்த அவர் அழுவார், சிரிப்பார், அசையாது கட்டை போன்று சமாதி நிலையில் கிடப்பார். சில வேளைகளில் இரவெல்லாம் இங்ஙனம் கழியும். அது போழ்து அவர் முன்னிலையில் என் உடல் விதிர் விதிர்க் கும். உள்ளம் பூரிக்கும். ஒருவகை பயபக்தி என்னை மேற்கொள்ளும். ஏனென்றால் சமாதி நிலையைப் பற்றி நான் அப்பொழுது முற்றிலும் அறிந்திலேன். நான் அச்ச முறுவதைப் பற்றி அறிந்த அவர் எனக்குப் பர வச நிலையின் வகைகளைப் பற்றி விளக்கிக் காட்டினார். அவர் முன்னிலையில் நான் அடைந்த பேரானந்தத்தை உலகில் எதனோடும் ஒப்பிட முடியாது.”

வாழ்க்கையின் லட்சியம் எதுவாயிருப்பினும் அதைக் கடைப் பிடிக்கும் இல்லறத்தார் இருவரது கருத் தும் ஒருமித்திருந்தா லொழியப் பெரு நன்மை பிற வாது. தற்கொண்டார் தவநெறி பூண்டிருந்த படியால் சாரதா தேவியாரும் நிறை காக்கும் நிலையில் பலவந்த மாக வைக்கப் பட்டார், என்று அவர்மீது அனுதாபம் காட்டியவர் எண்ணினர். ஆனால் அதைப் பற்றிய உண்மை அவரது வாக்கினின்றே வெளியாவது நன்று. தம் பாரியாளது போக்கு எத்தகையது என்பதை அறிய விரும்பிய பரமஹம்ஸர் அவரிடம் ஒரு நாள், “ எனது உள்ளத்தை உலக நாயகிக்கு நான் உவந்து

அளித்து விட்டேன். ஆதலால் உடலின்பத்துக்கு அது உடன் படுவதில்லை. ஆயினும் வேத விதிப்படி உன்னை மணந்த நான் உனது இச்சா சுதந்திரத்தைப் பூர்த்தி பண்ணி வைக்கக் கடமைப் பட்டிருக்கிறேன். உன் கருத்தை ஒளியாது வெளியிடுக" என்று பகர்ந்தார். இங்ஙனம் தம் நாயகர் மொழிவதைக் கேட்ட ஸ்ரீ சாரதா தேவியார், "தேவே! தங்களுக்குத் திருத்தொண்டு புரிந்து பேரருளுக்கு உரியவளாகி உய்தற் பொருட்டு இங்கு வந்தடைந்தேனே யொழிய, தங்களைப் பந்தத்தில் தள்ளுதற் பொருட்டன்று," என்றார்.

கோதில்லாக் குலமகள் விடுத்த இவ்விடை எத்தகையது என்பது சொல்லாமலே விளங்கும். அதில் கள்ளம் கபடம் ஒன்றுமில்லை. பிறரை சந்தோஷப் படுத்த வேண்டும் எனும் எண்ணமும் அதில் இல்லை. தமது தெய்வீக சுபாவமே அந்த விடையினின்று வெளியாகிறது. பர்த்தாவானவர் எங்ஙனம் பாரமார்த்திகத்தை லட்சியமாகக் கொண்டிருந்தாரோ, அங்ஙனமே அவருக்கேற்ற பதிவிரதையும் அதையே லட்சியமாகக் கொண்டிருந்தார். பாரமார்த்திகப் பெருவாழ்வில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அடைந்திருந்த மேன்மைக்கு அவரது தனித் தவ வலிமையே காரண மென்று பலர் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் அவருடைய சம்பூரண சித்தியின் செம்பாதி ஸ்ரீ சாரதா தேவியாரிடமிருந்தே தோன்றியதாகும். மன பரிபாகத்தில் இவ்விருவருள் எவர் பெரியவர் எவர் சிறியவர் என்று நிர்ணயிப்பது சாத்தியமன்று.

தூய்மையே வடிவெடுத்திருந்த தேவியாரின் மகிமையை முதன் முதல் அறிந்து கொண்டவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரே. வாழ்க்கைத் துணை எனும் சொல்லுக்கு

ஏறப தமது ஆதம்ய வாழ்க்கைக்கு அவர் எத்தகைய உதவி புரிந்தார் என்பதும் பரமஹம்ஸ தேவருக்கு நன்கு தெரியும். பிற்காலத்தில் சிஷ்யர்களிடம் ஸ்ரீ ராமகிருஷ்ணர், "அவள் பரிசுத்தமே வடிவெடுத்தவளாயிராது என்னை மோக வலையில் கட்டிப் பிடித்திருந்தால் நான் எங்ஙனம் தப்பிப் பிழைத்திருக்கக் கூடும்? விவாகம் நடந்துகொண்டிருந்தபொழுதே காம வாசனைகளை யெல்லாம் அவளுடைய உள்ளத்தினின்றும் அடியோடு அகற்றிவிட வேண்டுமென்று நான் அம்பாளிடம் பிரார்த்தனை பண்ணிவந்தேன். பின்பு அவள் என்னோடு பழகி வாழ்ந்த புனித வாழ்க்கையினின்றும் என் பிரார்த்தனைக்கு அகிலாண்ட நாயகி மனமிரங்கினள் என்பதைத் தெரிந்துகொண்டேன்" என்றுரைத்தார். இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததிலும், தக்ஷிணேசுவரத்தில் சந்தித்தவுடனே அவர் தம் நாயகியிடத்துக் காட்டிய தெய்வீக இணக்கத்திலும் மேலாம் தத்துவம் ஒன்று அமைந்திருக்கிறது. ஒரு வண்டியில் பூட்டிய இரண்டு காளைகளுள் ஒன்று நடப்பதும் மற்றொன்று நிற்பதும் சாத்தியப்படாது. இல் வாழ்பவருடைய அறநெறியும் அத்தகையதேயாம். பல வருஷங்களாகப் பரமஹம்ஸ தேவரும் ஸ்ரீசாரதா தேவியாரும் ஒருவரை யொருவர் சந்திக்கவில்லை. முந்தியவர் தக்ஷிணேசுவரத்தில் காளி கோயிலில் கடுந்தவம் புரிந்துகொண்டிருந்தார். பிந்தியவர் பிறந்தகத்தில் அமைதியாக வாழ்ந்து வந்தார். சரீரங்கள் வெவ்வேறு இடங்களில் இருந்தன வெனினும், அவர்களுக்கிடையே நெருங்கிய ஆத்மீய இணக்கம் ஏற்பட்டிருந்தது. இருவர் கருத்தும் உயர் நோக்கத்தில் ஒருமித்திருந்தன வாதலால் பர்த்தா சேகரித்த

பாரமார்த்திகச் செல்வம் பதிவிரதையின் உள்ளத்திலும் ஞான விளக்கினை ஏற்றுவதாயிற்று. தமது வாழ்க்கைத் துணையைத் தம்மிடமிருந்து பிரிக்கமுடியாதென்று ஸ்ரீ ராமகிருஷ்ணரே பகர்ந்திருக்கிறார். ஈசுவர சன்னிதானமானது ஒரு தடாகத்துக்கு ஒப்பானது. அன்பர் குழாம் அதில் வளரும் அல்லிக்கொடியாகும். அக்கொடியின் ஒரு பாகத்தை இழுத்தால் ஏனைய பாகங்களும் அதனோடு சேர்ந்துவரும். இவ்வுவமானம் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும் ஸ்ரீ சாரதா தேவியாருக்கும் முற்றும் பொருந்தும். ஒருவர் பாரமார்த்திகப் பெருவாழ்வில் புகுந்தகாலை மற்றவரும் அவரைப் பின் தொடர்வாராயினர்.



ஐந்தாம் அத்தியாயம்

# ஞானத்தாயின் பதவியைப் பெறுதல்

முதிர்வேனிற் காலத்தில் ஒரு வைகாசிப் பௌர்ணமியன்று நிறை நிலாவின் வெள்ளி வெளிச்சம் உலகைக் குளிப்பாட்டுகிறது. அன்று "பலஹாரிணி காளிகா" பூஜை எனும் திருவிழா நடைபெறுகிறது. ஜீவர்களின் பூர்வ கர்மபலனை அழிப்பது அதன் கருத்து. அவ்வுற்சவ சம்பந்தமாக தக்ஷிணேசுவர ஆலயமெங்கும் ஆரவாரம் நிறைந்திருக்கிறது. மக்கள் ஆடுகின்றனர், பஜனை பாடுகின்றனர், தேவி பூஜையைப் பார்க்கப் பதை பதைப்புடன் காத்துக்கொண்டிருக்கின்றனர். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் அறையிலும் வழிபாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகள் ஆய்க்கொண்

டிருக்கின்றன. ஏனென்றால் அப்பெரியாரும் பல ஹாரிணி காளிகா பூஜையைத் தாமே செய்யத் தீர் மானித்திருக்கிறார். ஆனால் ஜனக்கூட்டம் ஒன்றும் அவர் அறையில் இல்லை. பொது மக்களுக்குப் பரம ஹம்ஸ தேவரைப்பற்றி விசேஷமாக அதுபோழ்து ஒன்றும் தெரியாதிருந்ததே அதற்குக் காரணமாகும். சகதர்மிணி ஸ்ரீ சாரதா தேவியார் மட்டும் அவருடன் அறையில் இருக்கிறார்.

முதல் ஜாமத்தில் பூஜை ஆரம்பித்தது. ஸ்ரீராம கிருஷ்ணர் கிழக்கு முகமாக உட்கார்ந்து, ஆசமனம், பூத சுத்தி, திக்பந்தனம் முதலிய ஆரம்பச் சடங்குகளைச் செய்து முடித்தார். அவருக்கு எதிரே அகிலாண்ட நாயகி அன்னை பராசக்தியை எழுந்தருளப் பண்ணுதற் காக ஒரு பீடம் அமைக்கப்பட்டிருந்தது. அதன்மீது ஸ்ரீ—சக்கரமும் வரையப்பட்டிருந்தது. பீட சுத்தி செய்து, அதன்கண் தேவியை ஆவாஹனம் செய்யப் புகு முன்பு அவர் சிறிது தியானத்தில் அமர்ந்தார். தியானமோ பரவச நிலையாக மாறிற்று. இதற்கிடை யில் சாரதா தேவிக்கும் சமாதிநிலை கூடிவிட்டது. அகி லாண்ட நாயகிக்காக அமைக்கப்பட்டிருந்த பீடத்தின் மீது வீற்றிருக்கும்படி ஸ்ரீ சாரதா தேவியை பரம ஹம்ஸதேவர் வேண்டினார். மெய்ம்மறந்து பரவச நிலை யெய்தியிருந்த அன்னையும் அதில் அமர்ந்தார். அவரது திருமேனியின்மீது மஞ்சன நீர் தெளித்து ஸ்ரீ ராம கிருஷ்ணர் இங்ஙனம் பிரார்த்தனை பண்ணினார்:—
"ஹே அம்பா, நீ சர்வகாலமும் குமாரியாயிருக்கின்ற படியால் பாலா என்று அழைக்கப்படுகிறாய். சர்வ சக் திக்கும் ஆதாரமாயுள்ள ஈசுவரீ, திரிபுரசுந்தரீ, பரி பூரண நிலையின் வாயிலை எனக்குத் திறந்தருள்வாய்!

இம்மங்கையின் மேனியையும் மனதையும் புனிதப் படுத்தி, இவள்மீது எழுந்தருளி மங்கள மனைத்தும் உண்டாகும்படி செய்வாயாக!"

பிறகு அங்கநியாசம் எனும் சடங்கின் வாயிலாக சாரதா தேவியின் ஒவ்வொரு அங்கமும் அன்னை பரா சக்திக்கு உரியதென்று மந்திர பூர்வமாகக் கருதினர். அத்திருமேனியில் ஆவிர்ப்பவித்திருப்பது அண்ட நாயகி என்றும் பரமஹம்ஸ தேவர் தெளிந்தார். பின்பு ஷோடசோபசார பூஜை என்ற பதினறுவித சடங்கு களை யுடைய வழிபாட்டை அத்திருமேனியின் வாயி லாகப் பரமேசுவரிக்குச் செய்து முடித்தார். ஆராதனை இங்ஙனம் நடந்துகொண்டிருக்கையில் ஸ்ரீ சாரதா தேவி யாரும் பரவச நிலையில் மனங்குவிந்திருந்தார். அத்திரு மேனியின் வாயிலாகத் திகழ்ந்தது ஜகதீசுவரி என்றே சொல்லவேண்டும். பூஜை முடிவு பெறும் பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரும் சமாதியில் மூழ்கிவிட்டார். உட லங்கள் இரண்டும் அசைவற்று அமர்ந்திருக்கையில் வணங்குபவர் வணங்கப்படுபவர் ஆகிய இருவரும் அகண்ட சச்சிதானந்த சொரூபிணியாகிய பராசக்தி யின்கண் லயித்துவிட்டனர்.

சக்தியினூடு யோகாரூட நிலையில் நெடுநேரம் கழிந்தது. மூன்றும் ஜாமத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண ருக்குக் கொஞ்சங் கொஞ்சமாக வெளியுலக ஞாபகம் வந்தது. அப்பொழுது தாம் செய்த பூஜாபலனை அவர் தேவியின் திருவடியில் சமர்ப்பித்தார். அன்று ஒரு நாள் செய்த பூஜா பலனை சமர்ப்பிப்பதோடு அவர் நின்றுவிடவில்லை. ஆயுள் முழுதும் தாம் செய்த கடுந் தபசு, அத்வைத சித்தி உள்பட தாம் அடைந்த ஞான நிலை, தமது உடல், உயிர், உடைமை யனைத்தையும் அடி

யோடு ஒப்படைத்தார். அதற்கு அறிகுறியாகத் தமது ஜபமாலையைத் தேவியின் திருவடியில் வைத்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து இங்ஙனம் பிரார்த்தனை பண்ணினார்:—“ சர்வ மங்கள சொரூபிணியே, முக்தி உள்பட எல்லாக் காரியங்களையும் சாதிப்பவளே, ஜீவ கோடிகளுக்குத் தஞ்சமளிப்பவளே, உன்னை நமஸ்கரிக்கின்றேன்.” இவ்வாறு பூஜை முடிவுபெற்றது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தபசும் இப்பூஜையில் பூர்த்தியாயிற்று. சிறிது நேரத்துக்குள் ஸ்ரீ சாரதா தேவியின் சமாதிநிலை கலைந்தது. சரீர உணர்ச்சி பெற்றெழுந்த அவர் பரமஹம்ஸ தேவரை மனதால் வணங்கிவிட்டுத் தமது அறைக்குச் சென்றார்.

அகிலாண்டேசுவரியைப் பத்துவித சொரூபங்களில் பாவித்து வணங்குவது தேவி உபாசனையில் சொல்லப்பட்டிருக்கிறது. அச்சொரூபங்களுக்கு முறையே காளி, தாரா, ஷோடசி, புவனேசுவரி, பைரவி, சின்னமஸ்தா, தூமாவதி, பகளா, மாதங்கி, கமலா என்று பெயர். (काली, तारा, षोडशी, भुवनेश्वरी, भैरवी, छिन्नमस्ता, धूमावती, बगला, मातङ्गी, कमला.) பத்து சொரூபங்களில் ஒன்றாகிய ஷோடசி பூஜை இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரால் செய்யப்பட்டது. ஜகன்மாதாவைப் பதினாறு வயதுடைய பெண்ணாகப் பாவித்து வணங்குவது அதன் கருத்தாகும். வழிபடு தேவதையின் சின்னமாகப் படம், நிறைகுடம், விக்கிரஹம், யந்திரம், கன்னிகை ஆகியவைகளுள் எதை வேண்டுமானாலும் உபயோகப் படுத்தலாம். கடைசியில் சொல்லப்பட்டதாகிய யௌவனம் நிறைந்த கன்னிகையைச் சின்னமாக ஸ்ரீ ராமகிருஷ்ணர் கையாண்டார். அப்பொழுது சாரதா தேவிக்கு வயது பதினெட்டு ஆய்விட்டது. ஷோடசி என்னும் பதத்தின்

கருத்துக்கு ஏற்ப வழிபாட்டுக்குரிய கன்னிகை பதி னாறு வயதுடையவளாய் இருக்கவேண்டும் என்பது அவசியமன்று. யௌவனமும் அழகும் நிறைந்த பெண்ணைப் பராசக்தியின் வடிவாகக் கருதவேண்டும் என்பதே அதன் தாற்பரியம்.

நாயகரும் நாயகியும் கடைப்பிடித்த பாரமார்த்தி கப் பெருவாழ்வின் மேன்மையை இப்பூஜை நன்கு விளக்குகின்றது. ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பொறுத்த வரையில் அவர் உடற் கூற்றை அடியோடு வென்றதற்கு அது அறிகுறியாகும். கீழான இயல்புக ளெல்லாம் அவரிடத்திருந்து அடிபட்டுப் போய் விட்டன. சுக போகத்துக்கு உரியவள் என்று உலகத்தவரால் அனு மதிக்கப் பட்ட பாரியாளையே அவர் பராசக்தியின் வடிவெனப் போற்றுவாராயினர். காமத்தைக் கடிந்து தெய்வத் தன்மையிலேயே அவர் ஊறியவர் என்பதற்கு அப் பூஜை அத்தாட்சி யாகும்.

அங்ஙனம் அனுஷ்டிக்கப் பட்ட ஷோடசி பூஜை யானது ஸ்ரீ சாரதா தேவியின் மகிமையையும் நன்கு விளக்குவதாகும். விவாகம் முடிந்தவுடன் தமது வாழ்க் கைத்துணை புனிதம் வாய்ந்தவளாக வேண்டு மென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பாளிடம் பரிந்து வேண்டிக் கொண்டார். அவளுடைய அனுக்கிரகத்தின்படி அம் மையாரது இயல்பு அறவே மாறிவந்தது. பர்த்தாவின் பாரமார்த்திக சாதனம் முடிவுறுங்கால் பாரியாள் அவ ரிடம் சென்றாள். அப்பொழுது நாயகி நாயகரோடு மேலாம் வாழ்க்கையில் சம அந்தஸ்து வகிக்கத் தகுதி யுடையவளா யிருந்தாள் ; அதுமட்டு மல்ல. அகிலாண்ட நாயகியே அம்மாதரசியின் மனத்தகத்து எழுந்தரு ளுதற்குரிய தூய்மையும் அவளிடத் திருந்ததை அம்

மகாபுருஷர் காணலானார். அவர் திருஷ்டியில் பாரியாள் எனப்படுபவளே அன்னை பராசக்தியாய் விட்டாள். அத் தகைய பராசக்தியிடம் தமது தபோ பலன்களை யெல் லாம் அவர் பணிவுடன் சமர்ப்பிக்கின்றார். ஆகவே அவையாவும் சக்தியோடு ஒன்றித்திருந்த சாரதா தேவிக்கு உரியன வாகின்றன. தவம் புரிந்தவர் ஸ்ரீ ராம கிருஷ்ணர்; அத்தபோ பலன்களை உலக நன்மையின் பொருட்டுத் தம் கைவசம் வைத்திருந்தவர் ஸ்ரீ சாரதா தேவியார். இதுவே இவர்கள் இருவரும் செய்த ஷோடசி பூஜையின் கருத்தாகும். இதன் வாயிலாக ஞானமும் பாரமார்த்திகப் பெரும் பேறும் ஸ்ரீ சாரதா தேவிக்கு வாய்த்து விட்டன. அருள் நிறைந்த ஞானத் தாய் எனும் உயர் பதவிக்கும் அவர் உரியவர் ஆனார். ஆயினும் அப்பூஜையின் பிறகும் ஆயுள் முழுதும் அன்னை கடுந்தவங்கள் பல புரிந்தார். ஆனால் அவை யெல்லாம் தமது உள்ளம் பரிபாகம் அடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்யப் பட்டவைக ளாகா. அன்னையால் ஆட்கொள்ளப் பட்ட அருட் செல்வர்களும் செல்வியர்களும் உய்தற் பொருட்டேயாம். சிஷ்யர் களுக்காகவே தாம் தவம் புரிந்தார். சுரை போன்ற சில செடிகொடிகள் முதலில் பிஞ்சுவிட்டுப் பிறகு பூக்கின்றன. அதுபோன்று சிலர் சித்தி யடைந்த பின் உலகத்தவர் பொருட்டுச் சாதனம் செய்கின்றனர் என்று ஸ்ரீ ராம கிருஷ்ணர் சொல்லுவதுண்டு. இக் கூற்று ஸ்ரீ சாரதா தேவியாருக்கு முற்றும் பொருந்தும்.

மற்றொரு விதத்தில் ஷோடசி பூஜையானது அன்னை ஸ்ரீ சாரதா தேவியின் வாழ்க்கையில் முக்கிய மான தொரு சம்பவ மாயிற்று. பரமஹம்ஸ தேவரு டைய அருள் விருந்தின் பெரும் பகுதியை அன்னையார்

மூலம் அவர் உலகுக்கு ஊட்டினார். தமது சரீரத்தைக் கருவியாகக் கொண்டு ஆட்டிய ஜகதீசுவரியே ஸ்ரீ சாரதா தேவியின் சரீரத்திலும் ஆவிர்ப்பவிக்க வேண்டுமென்று அவர் பிரார்த்தித்தார். அன்று தொட்டே அன்னையின் சரீரம் அகிலாண்ட நாயகியின் சரீரமாயிற்று எனலாம். பின்பு அவர் உயிர் வாழ்ந்திருந்த தெல்லாம் அண்ட நாயகியின் ஆணையின்படியேயாம். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் ஸ்ரீ சாரதா தேவியும் சரீரத்தில் இருவர் எனினும் பொருளிலும் செயலிலும் ஒன்றித்து விட்டனர். நாயகருடைய சரீரம் ஒடுங்கிய பின்பும் நாயகியின் சரீரத்தின்வாயிலாகத் திருவருட் செல்வம் தரணியில் வழங்கப் பட்டது.



## ஆறும் அத்தியாயம்

# அத்யாத்மிக வாழ்வு

கொழுநனைத் தொழுது எழுபவள் தெய்வத்தைத் தொழவேண்டிய அவசியமில்லை எனும் இலட்சியம் இந்தியாவில் கற்புடைய மாதர் கருத்தில் தோய்ந்து தொன்றுதொட்டு. வழிமுறை வழிமுறையாக வந்துள்ள இக் கோட்பாட்டையே ஸ்ரீ சாரதா தேவியாரும் கடைப் பிடித்தார். கடவுளே தமக்குக் கொழுநனாக வாய்த்துள்ளார் என்பது அவ்வம்மையாரின் கருத்து. அவர் எண்ணத்துக்கு ஏற்ப ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தெய்வத் தன்மையே வடிவெடுத் திருந்தார். அம்மகாபுருஷரோடு பழகுபவர்க்கும் அவரைப் பற்றிச் சிந்திப்பவர்க்கும் ஆத்ம போதம் வருவிக்கவல்ல அருள் நிலையை

அவர் அடைந்திருந்தார். அத்தகையவர்க்கு அல்லும் பகலும் திருப்பணி செய்யும் பேறு சாரதா தேவிக்கு வாய்த்தது. அதனால் பரமானந்தத்தில் திளைத்திருப்பது அவருக்கு எளிதாயிற்று. பக்தியோடும் தியானத்தோடும் கூடிய திருத்தொண்டே ஆத்ம சாதனமாகிறது. அதைத்தான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதா தேவிக்குப் புகட்டினார். "குழந்தைகள் எல்லார்க்கும் சந்திரன் மாமா வாகிறான். அவ்வாறே கடவுள் எல்லார்க்கும் பொதுவானவர். அவரைப் பரிந்து போற்றுவதே பிறவிப் பயன். இரங்கி அழைப்பார்க்கு அவர் எளியவர் ஆகின்றார். நாடியழைத்தால் நீயும் அவரை அடைவாய்." இங்ஙனம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஷோடசி பூஜைக்குச் சில நாளைக்கு முன்பு சாரதா தேவிக்குப் புகட்டினார். பசுமரத்தாணி போன்று இப்போதனை அந்நல்லாள் உள்ளத்தில் பதிந்தது.

வடநாட்டு தேசாசாரப்படி மங்கையர் முக்காடிட்டு முகம்மூடிக் கொண்டல்லாது ஆடவர் முன்னிலையில் வருவதில்லை. அவ்வொழுக்கத்தைச் சாரதா தேவியார் தமது நாயகர் முன்னிலையிலுங்கூடக் கையாண்டு வந்தார். ஏனென்றால் மங்கையரது மேலாம் இயல்பாகிய அச்சமும் நாணமும் அவரிடத்துப் பெரிதும் குடிகொண்டிருந்தன. ஓரிரவு அண்ணலுக்கு அமுது படைக்க அவர் வழக்கப்படி முக்காடிட்டுக்கொண்டு வந்தார். அதுபோழ்து பரவச நிலை யடைந்திருந்த பரமஹம்ஸர் பரம்பொருளைப் பற்றிப் பேசத் தொடங்கினார். செவிக்கினிய அச்சொற்களைச் சாரதா தேவியாரும் செவி மடுத்துப் பருக ஆரம்பித்தார். உணவைப் பற்றியவும், காலத்தைப் பற்றியவும் ஆய எண்ணங்கள் பறந்தோடி விட்டன. இரவெல்லாம் பாரமார்த்திகப்

பேச்சிலேயே கழிந்தது. விடியற்காலத்தில்தான் அம்மையார்க்கு ஆக்கையைப் பற்றிய உணர்வு வந்தது. தலையின் மீதிருந்து துகில் நழுவி யிருந்ததும் அப்பொழுதுதான் அவருக்குத் தென்பட்டது. உடனே அதை இழுத்து முகத்தை மூடிக்கொண்டு தம் அறைக்குச் சென்றார். பிரவஞானந்தத்தில் சொக்கி யிருந்தபோது சரீரத்தைப் பற்றிய எண்ணமே வரவில்லை. ஆதலால் முகம் மூடுவதைப் பற்றியும் அவர் கருத்தில் கொள்ளவில்லை.

தமது சிஷ்யை ஒருத்திக்கு அன்னை பிற்காலத்தில் பகர்ந்ததாவது: "நான் தக்ஷிணேசுவரத்தில் வாழ்ந்திருந்தபோது அதிகாலையில் மூன்று மணிக்கு எழுந்திருந்து தியானம் செய்வேன். அப்பொழுது எனக்கு அடிக்கடி பரவச நிலை வந்துவிடும். தலையினின்று துகில் நழுவுவதும் அண்டையில் யாராவது நடமாடுவதும் எனக்குத் தெரியாது போய்விடும். ஆ, அக்காலத்திய மன நிலையை என்னென்பது! நிலா வெளிச்சத்தில் நான் கைகூப்பி வணங்குவதுண்டு. 'மனமே சந்திர கிரணத்தைப் போன்று நீ தூயதாயிரு' என்பேன். 'வெண்ணிலாவிலுங் கூடக் கொஞ்சம் மாசு படிந்திருக்கிறது. ஆனால், இறைவ! என் மனதில் சிறிதேனும் மாசு படியாது அருள் புரிவாய்' என்று நைந்துருகி வணங்குவேன். ஒழுங்காகத் தியானம் செய்பவர்க்கு உள்ளத்தில் இறைவனைக் காணவும் அவனுடைய சொல்லைக் கேட்கவும் இயலும். தூயவரது உள்ளத்தில் எழும் எண்ணத்தின்படிக் காரியமும் கடிதில் கைகூடும். தூயவரது உள்ளத்தில் சாந்தம் நிறைந்திருக்கும். சுவானுபவம் முற்றிவரும் பொழுது தங்கள் சித்தமிசை குடிகொண்டுள்ள தெய்வமே மற்றவர் எல்லாருடைய சித்தத்

திலும் குடி கொண்டிருப்பதைக் காண்பர். துன்புறுபவர், தீண்டத் தகாதவர், சண்டாளர் ஆகிய எல்லாருடைய உள்ளத்திலும் ஒரே இறைவன் உறைகின்றான். இதை அறியுங்கால் உண்மையான பணிவு உண்டாகிறது."

பாரமார்த்திகத் துறையில் தாம் அடைந்த சுவானுபவங்களைப் பற்றி ஸ்ரீ சாரதா தேவியார் யாரிடத்திலும் ஒன்றும் பேசமாட்டார். அப்படிப் பேசினால் பிறர் தம்மை அனுவசியமாகப் பெருமைப் படுத்துவார் என்ற அச்சமே அதற்குக் காரணமாகும். அத்தகைய நிகழ்ச்சியொன்று ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. தம் தலைவர் அடிக்கடி அடைந்த பரவச நிலையைத் தாமும் அனுபவிக்க வேண்டுமென்ற அவா அவருக்கிருந்தது. ஆனால் கணவரிடம் நேரில் சென்று தமது கருத்தை வெளியிட அவருக்கு இயலவில்லை. யோகினியம்மாள் எனும் ஒரு தோழியின் மூலம் அதைத் தெரிவித்தார். அப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணர் தனியாகத் தமது அறையில் அமர்ந்திருந்தார். தேவியின் விருப்பத்தைக் கேட்டும் அவர் வாளா இருந்து விட்டார். பின்பு திடீரென்று அவர் ஆழ்ந்த மன நிலையில் மூழ்கினார். அது போன்ற வேளைகளில் யாரும் அவருடன் பேசத்துணியார். ஆதலால் யோகினி யம்மாள் மௌன முற்றுச் சிறிது நின்றுவிட்டு அப்பால் போய்விட்டாள். அன்னை சாரதா தேவியின் அறையைத் திறந்து அதனுள் நுழைய அம்மாது முயன்றாள். ஆனால் அவள் ஆங்குக் கண்ட காட்சி தான் என்ன! பூஜையில் அமர்ந்திருந்த தேவியார் பரவச நிலையடைந்து சிரிக்கவும், அழவும், விதிர் விதிர்க்கவும் செய்யலானார். கண்ணீரும் ஓயாது பெருகுவதாயிற்று. பிறகு அவர் அமைதியுற்று வார்த்த சிலை போன்று அமர்ந்திருந்தார். அதைச் சமாதி நிலையென்

றறிந்த யோகினி யம்மாள் கதவை மூடிவிட்டு அப்பால் போய்விட்டாள். பின்பு அதைப்பற்றித் தோழியானவள் விசாரித்த பொழுது அன்னையார் புன்சிரிப்புப் பூத்துச் சும்மா விருந்து விட்டார்.

பரமஹம்ஸ தேவர் சரீரம் மறைந்த பின்பு ஸ்ரீ சாரதா தேவியார்க்கு இதுபோன்ற பரவச நிலை அடிக்கடி வருவதுண்டு. ஆனால் இவைகளெல்லாம் பாரமார்த்திக வாழ்க்கைக்கு முற்றிலும் அவசிய மானவைகளல்லவென்று அவர் சொல்லுவார். தெய்வீகக் காட்சிகள் காண்பது கூட சாதகர்கள் எல்லார்க்கும் வாய்ப்பதில்லை. இயல்புக்கு ஏற்றபடி சில சாதகர்களுக்கே இவை தென்படுகின்றன. ஆனால் வெளி யாடம்பரத்தாலன்றி, வாழ்க்கை புனிதமுடையதாக மாறுவதே அதன் அடிப்படையான கோட்பாடாகும். எல்லார்க்கும் எளிதில் விளங்கும்படி அன்னையார் அதைப்பற்றி இயம்பியதாவது :— "ஆத்ம ஞானத்தால் சாதகன் அடைவது வேறு என்ன இருக்கிறது? அவனுக்கு இரண்டு கொம்புகள் முளைக்கின்றனவா? இல்லை. சித்த சுத்தி யுண்டாகிறது. சுத்தியடைந்த மனதில் ஞானமும் ஆத்ம போதமும் ஓங்கி ஒளிர்கின்றன."

இலௌகிக வாழ்க்கைக்கு வேண்டிய பயிற்சிகளையும் தக்க முறையில் குருதேவர் அன்னைக்கு அளித்து வந்தார். இல்லத்தில் உள்ள பண்டங்களை ஒழுங்குபடுத்தி வைப்பதில் கொஞ்சம் கருத்தைச் செலுத்த வேண்டும். அடிக்கடி கையாளப்படும் பொருள்களைப் பக்கத்திலும் மற்றவைகளை எட்டவும் வைப்பது உசிதம். பழகுதற்கு எடுத்த பாண்டம் ஒன்றைத் திரும்பவும் பழைய இடத்திலேயே வைக்கின்ற பழக்கமிருந்தால் வெளிச்சமில்லாத போதும் அதை எளிதில் கையாள

லாம். தீபத்துக்குத் திரி திரிப்பது, காய்கறி அரிவது, சமைப்பது, பரிமாறுவது, துணி துவைப்பது, வீடு பெருக்குவது, மெழுகுவது ஆகிய இவை யாவும் அவர் கொடுத்த பயிற்சியில் அடங்கி யிருந்தன. வண்டி படகு முதலியவைகளில் பிரயாணம் போகும்பொழுது உடன் வருபவர்களுக்குச் சௌகரியம் செய்து கொடுத்துவிட்டுத் தான் கடைசியாக வண்டியேற வேண்டுமென்றும் பிரயாணத்தின் இறுதியில் எல்லாரையும் இறக்கிவிட்ட பிறகு, சாமான் ஏதாவது மறதியாக வண்டியில் அல்லது படகில் நின்றுவிட்டதாவென்று பார்த்து நிச்சயித்த பிறகே அவர் வண்டியினின்று வெளியே போகவேண்டுமென்றும் கற்பித்துக் கொடுத்தார். காலம் இடம் நிலைமைக்கு ஏற்றவாறு உலகத்தவரோடு உறவாடக் கற்றுக் கொள்ளுதல் லௌகிக வாழ்க்கைக்கு இன்றியமையாதது. வாழ்க்கை வெற்றிகரமாக நடைபெறுவது இத்தகைய பயிற்சியைப் பொறுத்திருக்கிறது. மாந்தர் இயல்புக்கு ஏற்றவாறு அவர்களோடு பழகவேண்டும். எல்லாருடைய சரீரமும் சதை எலும்பு ரத்தத்தைக் கொண்டு ஆயிருக்கின்றன; ஆனால் மன அமைப்பிலோ வேறுபாடுகள் பல இருக்கின்றன. ஆதலால் நட்புக் கொள்ளுதலில் எச்சரிக்கை மிக எடுத்துக்கொள்ள வேண்டும். சிலரோடு தாராளமாகப் பழகலாம்; மற்றும் சிலரோடு சுருக்கமாகப் பேச்சு வார்த்தை வைத்துக் கொண்டால் போதும்; வேறு சிலரோடு பழக்கமே வைத்துக் கொள்ளாதிருப்பது உத்தமம். ஆக பாரமார்த்திகம் எவ்வளவு பண்புடன் புகட்டப்பட்டதோ, அவ்வளவு பண்புடன் உலகத்தோடு ஒட்டி வாழ்தற்கு ஏற்ற உலகியல் அறிவும் ஸ்ரீ சாரதா தேவிக்குத் தம்மை ஆட்கொண்டவரால் புகட்டப்பட்டது.

## ஏழாம் அத்தியாயம்

# தற்கொண்டாரைப் பேணுதல்

அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் சுமார் பதினைந்து வருஷகாலம் தக்ஷிணேசுவரத்தில் தங்கியிருந்தார். அதற்கிடையில் அவர் ஏதோ சில சமயங்களில் மட்டும் தமது பெற்றோரைப் பார்க்க ஜெயராம்பட்டிக்குச் சென்றிருந்தார். மற்றப்படித் தம்மைக் கொண்டவர்க்குக் கைங்கரியம் செய்வதே அவருடைய முக்கியமான அலுவலாயிருந்தது. ஆலயத்தில் நஹபத்கானா எனும் சிறு வீடு ஒன்று உண்டு. அதன் மாடி, ஆராதனை வேளைகளில் மேளம் வாசிப்பதற்கென்று ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. கீழே தரை மட்டத்தில் இருக்கும் அறையில் அன்னையார் வசித்திருந்தார். அது வண்ணத்தில் மிகச் சிறியது. அதன் வாயில் மிகத் தணிந்திருந்தபடியால் ஆரம்பத்தில் அன்னை அதனுள் நுழையும் பொழுதெல்லாம் தலையை மேற்சட்டத்தின் மீது மோதிக் கொள்ளும்படி ஏற்படும். அந்தச் சிறு வீட்டில் வசிக்கும் மாது ஒருத்திக்கு மறைவு உண்டாக்குதற்பொருட்டுச் சுற்றிலும் தாழ்வாரத்தில் தலையுயரம்வரையில் மூங்கில் பாய் கட்டப்பட்டிருந்தது. போதிய அளவு சூரிய வெளிச்சம் உள்ளே செல்லுதற்கும் வழியில்லை. தமது அகமுடையார்க்கும் வயது முதிர்ந்த மாமியார்க்கும் அவர் சமைத்தது அதே அறையில்தான். சாமான்கள் வைத்திருந்ததும் அதற்குள்ளேயே. இன்னும் தாம் உட்கார்ந்திருந்ததும் உறங்கினதும் அச்சிறிய அறைக்குள்ளேயே! மனம் கொண்டது மாளிகை.

எனும் கருத்துக்கு ஏற்ப அன்னையார் அவ்விடத்தைப் பற்றிக் குறையொன்றும் கூருது இனிது வாழ்ந்து வந்தார்.

அச்சிறு வீட்டில் அன்னைக்கு வசதிகள் போதா என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நன்கு அறிந்திருந்தார். ஆனால் அதற்கு நிவர்த்தி தேட அவரால் இயலவில்லை. அக்கோவிலை ஸ்தாபித்த ராணி ராசமணியின் மருகர் மதுரநாத விசுவாசர் நெடுநாளைக்கு முன்பே காலஞ் சென்றுவிட்டார். அவர் மட்டும் அதுபோழ்து உயி ரோடிருந்திருந்தால் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார்க்கு எல்லாவித சௌகரியங்களையும் அவர் செய்து வைத் திருப்பார். இப்பொழுதோ அது சாத்தியமன்று. ஆல யத்தில் அந்தச் சிறு வீட்டைத் தவிர மறைவான நல்ல அறை வேறு ஒன்றும் வாய்க்கவில்லை. அன்னையார் இயல்பில் நாணமுடையவர். ஆதலால் பலபேர் பார்வை யில் படும் இடங்களில் வசிக்க அவர் ஒருப்படுவதில்லை. வெகுநாளாக அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் முன்னிலையிலும் முக்காடணிந்து வந்துகொண்டிருந்தார். வைகறை யில் மற்றெல்லார்க்கும் முன்பு மூன்று மணிக்கே அவர் துயிலெழுந்து ஸ்நானம் முதலியவைகளை முடித்துக் கொண்டு ஒருவர் கண்ணுக்கும் தென்படாது தமது அறைக்குள் போய்விடுவார். பின்பு பிற்பகல் ஒருமணிக்கு மாந்தர் சஞ்சாரமில்லாதிருந்தபோது, தமது நெடுங் கூந்தலை உலர்த்த வெளியே வந்து வெயிலில் உட்காரு வார். ஆனால், கோயில் அதிகாரி போன்றவர்களுக்குங் கூட அவர் ஆங்கு வசித்திருந்தது கேள்வி மாத்திரமே யொழிய, அவரை அவர்கள் நேரில் கண்டதில்லை. இரு ளில் கங்கையில் நீராடப்போன அன்னையார் ஒரு தட வை ஒரு முதலையை மிதிக்கும் நிலைமையினின்றுந் தப்

பித்தார். அதைக் கேள்வியுற்ற குருதேவர் கையில் விளக்கை எடுத்துச் செல்லுவது உசிதமென்று சொன்னார். வசதியில்லாத விடத்தும் ஸ்ரீ சாரதா தேவியார் வாழ்க்கையை வகைப்படுத்திக் கொண்டது ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பரம திருப்தியை உண்டு பண்ணிற்று. ஆனால் பெண் மக்கள் எப்பொழுதும் பேதைகளாகப் பின்னணியில் இருக்க வேண்டுமென்று அவர் கருதியதாக எண்ணலாகாது. அவருடைய சிஷ்யைகளில் கௌரி யம்மாள், கொலாப் அம்மை போன்றவர்கள் சிலர் துணிவுடன் பொதுக் காரியங்களில் ஈடுபடுவதுண்டு. ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அத்தகைய செயல்களுக்கு உற்சாகமூட்டி வந்தார். அவர்கள் தங்கள் பெண் தன்மையை இழந்து விடலாகாது என்று சொல்லுவாரே யொழிய, அவர்கள் செயலற்று அந்தப்புரத்தில் மறைந்திருக்க வேண்டுமென்று சொல்லமாட்டார். தம் தமையனாரின் குமாரத்தி லக்ஷ்மி தேவி என்பவள் அவர் முன்னிலையில் ஆடவும் பாடவும் அபிநயிக்கவும் செய்வாள். அது லக்ஷ்மியின் இயல்பு என்றும், ஆனால் அதைப்போன்று சாரதாதேவி பாவனை பண்ணித் தம் சொந்த இயல்லை இழந்துவிட லாகாதென்றும் குருதேவர் போதிப்பார். ஆடவரைப் போன்று மகளிரும் அவரவர் இயல்லை அனுசரித்தே முன்னேற்றமடைய வேண்டுமென்பது ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருத்து.

தள்ளாத வயதில் கங்கைக் கரையோரம் வாழ வேண்டுமென்று விரும்பிய தமது மாமியாரை ஸ்ரீ சாரதா தேவியார் பாங்குடன் பராமரித்து வந்தார். பல அலுவல்களுக்கிடையிலும் மாமியாரைப் பற்றிய எண்ணம் அவர் மனதில் இருந்துகொண்டிருக்கும். 'சாரதா' வென்று அவர் கூப்பிடும் சத்தம் முடியுமுன்பே

மருமகள் மாமியார் முன்னிலையில் பறந்தோடி, அவருடைய ஏவலை எதிர்பார்த்து நிற்பார். பர்த்தாவினிடத்து தேவியார்க்கு எவ்வளவு பக்தி யிருந்ததோ அதைவிடப் பன்மடங்கு அதிகம் அவரை ஈன்றெடுத்த அன்னையிடம் இருந்தது.

ஆட்கொண்ட அண்ணலுக்கும் அவருடைய தாயார் ஸ்ரீ சந்திரா தேவியாருக்கும் சமைப்பது நம் அன்னைக்கு தக்ஷிணேசுவரத்தில் ஏற்பட்ட முக்கியமான கடமையாகும். பரமஹம்ஸ தேவருக்கு அடிக்கடி வயிற்றில் கோளாறு ஏற்பட்டுவிடும்; அதற்கு ஏற்றபடி உணவை எச்சரிக்கையுடன் பக்குவப் படுத்துவது அன்னையின் பொறுப்பா யிருந்தது. ஆரம்பத்தில் அவ்விருவர்க்கு மட்டும் அவர் சமைத்துக் கொண்டிருந்தார். ஆனால் நாளேற ஏற அன்பர் கூட்டம் அதிகரித்துக் கொண்டேபோனது. பக்தர்களில் பெரும்பாலர் அல்லும் பகலும் தக்ஷிணேசுவரத்தில் தங்கி விடுவார்கள். அத்தனை பேருக்கும் அன்னமாக்கி அளிப்பது அன்னையின் கடமையாயிற்று. அவரும் அப்பணியை மகிழ்வுடன் செய்துவந்தார். அங்ஙனம் அன்பர்க்குப் பணி செய்வது தமக்குக் கிடைத்த பாக்கியமென்றும் அவர் உணர்வார். அத்தனை அலுவல்களுக்கிடையிலும் இருவேளைகளிலும் தியானம் செய்வது தவறாது. ஒழுங்காக நாள் தோறும் தியானம் நடைபெறவேண்டுமென்று குருதேவரும் வற்புறுத்துவார். பெண்டிர்கள் சோம்பலுற்றிருக்க லாகாதென்றும் வீண்காலம் போக்கலாகாதென்றும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர்களுக்குச் சொல்லுவார். அன்னையாரின் கருத்தும் அதுவே. மனதில் பல விதமான எண்ணங்கள் தோன்றுவது வேலையில்லாது வீண்காலம் போக்கும் பொழுதிலே யன்றோ?

சமைத்த உணவு வகைகளை ஒரு தட்டில் வைத்துக் குருதேவருக்குப் படைக்க அவருடைய அறைக்கு எடுத்துச் செல்லுவது அன்னையின் வழக்கம். ஒரு நாள் அவர் அப்படி உணவு எடுத்துக்கொண்டு போகையில், குருதேவருக்குத் தானும் கொஞ்சம் பணிவிடை செய்ய விரும்பிய மாது ஒருத்தி கையேந்தி அத்தட்டினை வாங்கிக்கொண்டாள். பின்பு அவளே அப் போஜனத்தைக் குருதேவருக்குப் பரிமாறினாள். அன்னையாரும் அவள் விரும்பியபடி குருவுக்குக் கைங்கரியம் செய்ய அவளை விட்டுவிட்டுத் தாம் விசிறி வீசிக்கொண்டு நின்றார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அவ்வுணவை அருந்த இயலவில்லை. உண்பதுபோல் பாசாங்கு பண்ணிக் கொண்டிருந்தார். அவரது செயலை அன்னையாரும் கவனித்தார். நல்லொழுக்க மில்லாதவர் கைப்பட்ட உணவைக் குருதேவர் அருந்த முடியாதென்பதும், அம் மாது ஒழுக்கத்தில் மேலானவள் அல்லள் என்பதும் அன்னையாருக்குத் தெரிந்திருந்தது. ஆயினும் சிறிது உணவாவது அருந்தவேண்டுமென்று அவரை அன்னையார் வேண்டிக்கொண்டார். அம்மாது ஆலயத்தை விட்டுச் சென்றபிறகு அவளைப்பற்றிப் பேச்சு நடந்தது. தூய வாழ்க்கை வாழாதவரது கையில் இனி அவ்வாறு சமைத்த உணவைக் கொடுக்கலாகாதென்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்னார். அருளே வடிவெடுத்த அன்னையார் அதற்கு விடையாக, "கூடுமானவரையில் முயலுகிறேன். ஆனால் ஒழுக்கமற்றவரும் விரும்பி யொன்றை என்னிடமிருந்து வேண்டுவாராயின், இல்லை யென்று மறுத்து இயம்ப என்னால் இயலாதே" என்று கைகூப்பிக்கொண்டு விண்ணப்பித்தார். குருதேவர் ஒன்றும்

பேசாதிருந்துவிட்டா ரெனினும் கருணைகரத்தாயின் மேலாம் இயல்லைப் பெரிதும் பாராட்டினார்.

நாளடைவில் ஸ்ரீ ராமகிருஷ்ணரது முன்னிலைக்கு அன்பர் குழாம் அதிகமாக வருவதாயிற்று. அதில் பெண் மக்களும் பலர் இருந்தனர். ஞானத்தாய் ஸ்ரீ சாரதா தேவியை அவர்கள் முற்றிலும் பின்பற்றினர் என்பது சொல்லாமலே விளங்கும். அவர்களுள் ஏற்கனவே இயம்பப்பட்ட கோலாப் அம்மையும் ஒருத்தி. ஒருநாள் தமக்கு அன்னம் பரிமாறும்படி குருதேவர் கோலாப் அம்மைக்குக் கட்டளையிட்டார். அன்றுமுதல் அவ் வம்மையே நாள்தோறும் குருதேவருக்கு போஜனம் படைக்க முற்பட்டு விட்டாள். தம்மை ஆட்கொண்ட வருக்குப் பணிவிடை செய்வதே சாரதா தேவியாருக்கு ஒப்பற்ற இன்பமூட்டி வந்தது. ஒரு விதத்தில் அது அவருடைய தனியுரிமை யென்றும் சொல்லவேண்டும். ஆயினும் தாம் பெறும் இன்பத்தைப் பிறரும் பெற வேண்டும் என்னும் உயர் நோக்கத்துடன் தம் உரி மையை அவர் மகிழ்வுடன் விட்டுக் கொடுத்தார். தெய் வந் தொழாது கொழுநனைத் தொழும் மாண்புடை யாருக்குப் பல நாள் இத்தகைய இடைஞ்சல் ஏற்பட்ட விடத்தும் அவர் அதைப் பரநன்மையின் பொருட்டுப் பொருட் படுத்தா திருந்தார். தனி யுரிமை தேடுவது மெய்யன்பர் இயல்பன்று.

சமைப்பதில் அன்னையார்க்கு இருந்த ஆற்றல், வீட்டுக் காரியங்களை நிர்வகிப்பதில் அவருக்கு ஏற்பட் டிருந்த திறமை முதலியவைகளைப் பரிகசிப்பதுபோல் இருப்பதாக சில வேளைகளில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பேசு வார். ஆனால் கேலி விளையாட்டுகளுக் கிடையில் அவர் தேவியார்மீது மரியாதை மிக வைத்திருந்தார். அச்சத்தை

யும் நாணத்தையும் ஆடையாக அணிந்திருந்த அம்மை யார் ஆத்ம ஞானமே வடிவெடுத்தவர் என்பது குரு தேவருக்குத் தெரியும். மண்ணுலகத் தவர்க்கு ஞானத் தை வழங்க வந்த நாயகி இவள் என்பது அவருடைய துணிபு. ஆதலால் அருள் தாகம் உடையவர்களின் இயல்புகளுக்கு ஏற்றவாறு என்னென்ன மந்திரோப தேசம் செய்ய வேண்டு மென்று அன்னையார்க்கு அவர் புகட்டி யிருந்தார். ஆத்மஞானத்தில் ஸ்ரீ சாரதா தேவி யார் தமக்குப் பின்வாங்கியவர் அல்லர் என்று ஸ்ரீ ராம கிருஷ்ணருக்குத் தெரியும். தமது சிஷ்யர்களுள் ஒருவ ராகிய சுவாமி திரிகுணாதீதருக்கு அவர் அவ்வுண் மையை எடுத்தோதி அம்மையாரிட மிருந்தே மந்திர தீக்ஷை பெற்றுக் கொள்ளும்படி ஏவினார்.

தம் பிராட்டியாருடன் உரையாடும் பொழுது எத் தகைய பதங்களைப் பிரயோகிப்பது என்பதில் ஸ்ரீ ராம கிருஷ்ணர் கருத்து மிகச் செலுத்தினார். ஓர் இரவு தமது அறைக்குள் தமக்கு உணவு எடுத்து வந்தவள் தமது தமையனாரது புதல்வி லக்ஷ்மி யென்றெண்ணி, அவர் " அடி, கதவைத் திறந்து வைக்காதே " என்றார். " இதோ கதவை மூடுகிறேன் " என்று உடனே அன்னை யார் விடை கொடுத்தார். அது யாருடைய குரல் என்று தெரிந்ததும் குருதேவர் திடுக்கிட்டு விட்டார். " ஆ, நீயா! லக்ஷ்மி யென்று நினைத்தேன். அலட்சியமாக நான் பேசியதைப் பொருட் படுத்தாதே" என்றார். லக்ஷ்மியிடம் பேசுவது போன்று தம்மிடம் பேசுவ திலும் குறை யொன்று மில்லை யென்றார் அன்னையார். குருதேவர்க்கு அப்பொழுதும் அமைதி யுண்டாக வில்லை. மறுநாட் காலையில் அன்னையின் அறைக்குச் சென்று " நான் இரவெல்லாம் உறங்கவில்லை. அவ

மரியாதையாக உன்னிடம் கட்டளை யிட்டதை யெண்ணி வருந்திக் கொண்டிருந்தேன்" என்றார்.

அன்னையார் தம்மிடம் அனுப்பப் படும் பட்சணங்களில் ஸ்ரீ குருதேவர்க்கு மட்டும் கொஞ்சம் வைத்து விட்டுப் பெரும் பகுதியை அங்கு வரும் குழந்தைகளுக்கு எடுத்து வழங்கி விடுவார். பொருளை அப்படிப் பெருமிதமாகச் செலவு பண்ணினால் வீட்டுக் காரியங்களைச் சிக்கனமாக நிர்வகிப்பது எங்ஙனம் என்று பரமஹம்ஸ தேவர் ஒரு தடவை ஆக்ஷேபித்தார். தயா நிதியாகிய தாயின் இயல்புக்கு அது பெருந்தடையாயிற்று. அவர் பதில் ஒன்றும் பேசாது கூர்த்த முகக் குறியுடன் வெளியேகினார். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் தாம் செய்த தவறுதலை உடனே தெரிந்துகொண்டார். தமையனாரது பிள்ளையிடம் அவர் பதைபதைப்புடன் "ராம லாலா, உடனே ஓடி உன் சிற்றன்னைக்கு ஆறுதல் சொல்; அவள் சினந்து கொள்வாளாயின் நான் ஒழிந்தேன்" என்று பகர்ந்தார். வெளிப்படையாகப் பார்க்குமிடத்து ஸ்ரீ சாரதா தேவியார் செய்த பணிவிடைகளை யெல்லாம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஏற்றுவந்தாரெனினும், மனத்தகத்து அவர் அம்மையாரிடம் மட்டில்லா மரியாதை வைத்திருந்தார்.

தம் நாயகரிடம் ஸ்ரீ சாரதாதேவியார் கொண்டிருந்த பக்தியோ சொல்லில் அடங்காதது. அவருக்கு முழுமனதுடன் பணிவிடை செய்ததைத் தேவியார் பெருங் காரியமாக நினைக்கவில்லை. எந்த உயர் நோக்கத்தைப் பிறவிப் பயனைப் பர்த்தா பாராட்டினாரோ அதே நோக்கத்தைப் பாரியாளும் ஏற்றுக்கொண்டார். மேலாம் வாழ்க்கையிலும் அருள் தாகத்திலும் இருவர் கருத்தும் ஒருமித்திருந்தன. தூய வாழ்க்கையையும் புலனடக்கத்தையும் அவர்கள் அணிகலமாகக்கொண்ட

வர் ஆவர்; அங்ஙனமே அவர்கள் இருவரும் பண ஆசையை முற்றத்துறந்த மேலோர் ஆவர். அதற்கு எடுத்துக்காட்டாக நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை விளக்கு வது பொருந்தும். அக்காலத்தில் மார்வாரி பக்தர் ஒரு வர் ஸ்ரீ ராமகிருஷ்ணரது சம்ரக்ஷணைக்காகப் பதினுயி ரம் ரூபாய் அவருக்கு நிதியளிப்பதாக வந்து வணங்கி வேண்டினர். பொருள் படைத்திருப்பதைப்பற்றி எண் ணிய மாத்திரத்திலேயே யாரோ வந்து தமது தலை யைக் கூறு கூறாக அறுப்பதுபோன்று அவருக்கு வேதனையுண்டாயிற்று. அவ்வாறு ஆசைவலையை வீசித் தம்மைச் சோதிப்பது எதற்காகவென்று அவர் வழிபடு தெய்வமாகிய ஜகன்மாதாவை நொந்துகொண்டார். பிறகு அக்கொடையாளி நிதியை ஸ்ரீ சாரதாதேவியார் பெயரிலாவது அளித்துவிடலாமென்று விரும்பினர். அச்செய்தி அம்மையாரிடம் எடுத்துச் செல்லப்பட்டது. "ஏன், நீயாவது அதை ஏற்றுக்கொள்ளலாமே; என்ன சொல்கின்றாய்?" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். அன்னை யாரோ உடனே தங்குதடையின்றி "அது எவ்வாறு தகும்? நான் பொருள்படைத்திருப்பது தாங்கள் படைத்திருப்பதற்கு ஒப்பாகும். ஏனென்றால் என் உயிர் உடல் உடைமை யனைத்தும் தங்களுடையன. ஆதலால் அந்த நிதியை நான் ஏற்பது முறையன்று" என்றார். அன்னையாரின் அறிவுநிறைந்த அவ் வார்த்தை ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அளவிலா அக மகிழ்ச்சியை உண்டு பண்ணிற்று.

அவரவர் மன பரிபாகத்துக்கு ஏற்றவாறு மக்கள் விவாகத்தைப் பொருள்படுத்துகின்றனர். சிலருக்கு அது சிற்றின்ப வாழ்க்கைக்கு ஏதுவான ஒரு லௌகிகச் சடங்கு. அறிவுடையோர் கோட்பாட்டிலோ, அது ஆத்ம

சாதனத்துக்கு உறுதுணையாகின்றது. மறைமுடியாகிய உபநிடதம் போதிப்பதாவது:—

न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति
आत्मनस्तु कामाय पतिः प्रियो भवति ।
न वा अरे जायायै कामाय जाया प्रिया भवति
आत्मनस्तु कामाय जाया प्रिया भवति ।
न वा अरे पुत्राणां कामाय पुत्राः प्रिया भवन्ति
आत्मनस्तु कामाय पुत्राः प्रिया भवन्ति ।

கணவன் நேசிக்கப்படுவது கணவனின் வடிவத்தைமுன்னிட்டல்ல, கணவனின் வடிவத்தில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது. மனைவி நேசிக்கப்படுவது மனைவியின் வடிவத்தை முன்னிட்டல்ல, மனைவி வடிவத்தில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது. புத்திரர்கள் நேசிக்கப்படுவது புத்திர வடிவங்களை முன்னிட்டல்ல, புத்திர வடிவங்களில் இலங்கும் ஆத்மாவே நேசிக்கப்படுகிறது.

இக்கருத்தை நிறைவேற்றும் மணவாழ்க்கையே மேலானது. பண்டைக்காலத்துப் பெரியோர் இதையே இலட்சியமாகக் கொண்டிருந்தனர். இந்த நல்லறத்தை மறந்திருந்த இக்காலத்து மக்களுக்கு அதை மீண்டுமொரு முறை ஞாபக மூட்டுதற்கென்றே ஸ்ரீ ராமகிருஷ்ணரும் ஸ்ரீ சாரதா தேவியாரும் இல்வாழ்வைக் கடைப்பிடித்தனர்போலும். ஒருவர்மீது ஒருவர் பூண்டிருந்த நட்பு உடலை ஒட்டியதன்று. போகம் பொருள் முதலிய உலக ஆசைகளுக்கு ஆங்கு இடமில்லை. ஆத்மா ஆத்

மாவை நேசிப்பதே மெய்யன்பு என்பதை அவர்கள் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்கள். மண்ணுலகில் உள்ளோர்க்கு இவர்களுடைய மணவாழ்க்கை யாண்டும் உயர்ந்த லட்சியமாக ஒளிரும்.



எட்டாவது அத்தியாயம்

## நலனும் பொலனும் கூடிய பல நிகழ்ச்சிகள்

தக்ஷிணேசுவரத்தில் ஸ்ரீ சாரதா தேவியார் சுமார் பதினைந்து வருஷகாலம் வாழ்ந்திருந்தாரென்றும், அது போழ்து இடையிடையே தாயகமாகிய ஜெயராம்பட்டிக் குப்போய்வந்தா ரென்றும் முன்னமே சொல்லப்பட் டது. அவர் 1874-ம் வருஷம் மார்ச்சு மாதம் தம் கிராமத் துக்குப் போயிருந்தபோது பிதா காலஞ் சென்றுவிட் டார். புரோகிதத் தொழிலினின்று அவர் சம்பாதித்த வருவாய் இப்பொழுது நின்றுவிட்டது. பூமியினின்று கிடைத்த தானியம் மிகக்குறைவு. நிலத்தை ஒழுங்கா கச் சாகுபடி செய்தற்கும் யாருமில்லை. சாரதா தேவி யின் தம்பிமார் நால்வரும் வயதில் சிறியோர். அவர்க ளுள் மூத்தவனுக்கே இன்னும் கல்விப்பயிற்சி பூர்த்தி யாகவில்லை. குடும்பபாரம் முழுதும் விதவை சியாமா சுந்தரி தேவியின் தலையில் வீழ்ந்தது. வறுமையோ பன்மடங்கு அதிகரிப்பதாயிற்று. அப்பொழுதும் அவ் வம்மை ஊக்கத்தையும் தன்னம்பிக்கையையும் கைவிட வில்லை. பிள்ளைகளைப் படிப்பதற்குச் சொந்தக்காரர் வீடுகளுக்கு அனுப்பிவிட்டார். கூலிக்கு நெல் குத்திக்

கொஞ்சம் பொருள் தேடினார். சொந்த நிலத்தில் கிடைத்த சொற்ப நெல்லையும் கூலியாகக் கிடைத்த பொருளையும் கொண்டு அவர் குடும்பத்தை ஆதரித்து வந்தார். இந்தக் கஷ்ட தசையில் அவருக்கு மகள் சாரதையினிடமிருந்து ஆறுதலும் தேறுதலும் அகப்பட்டன. கிராமத்துக்குப் போகும் பொழுதெல்லாம் சாரதாதேவி தாயுடன் சேர்ந்து கஷ்டப்பட்டு உழைப்பார். நெல் குத்துவதிலும் அல்லலுற்றிருந்த அன்னைக்கு உதவி புரிவார். முயற்சி திருவினையாக்கும் எனும் கோட்பாட்டுக்கு ஒப்பக் காலக்கிரமத்தில் கஷ்டதசை கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்தது. மூத்த சகோதரனுக்கு வயது வந்த பிறகு புரோகிதத் தொழிலில் கொஞ்சம் பொருள் சம்பாதித்தான். மற்றவர் இருவர்க்கு நிலத்தில் வேளாண்மை செய்யும் ஆற்றல் வந்தது.

தமது தந்தையை இழந்த ஒரு வருஷத்துக்குப் பிறகு தக்ஷிணேசுவரத்தில் வசித்திருக்கையில் ஸ்ரீ சாரதா தேவிக்கு வயிற்றுக்கடுப்பு உண்டாயிற்று. தக்க மருத்துவர் ஒருவரைக் கொண்டு சிகிச்சைகள் பல கையாளப்பட்டன. ஆனால் அக்கொடிய நோய் குணமடைதற்குப் பதிலாக அதிகரித்துக்கொண்டே போயிற்று. பல நாள் அது பெரும் வேதனையை விளைவித்துக் கொண்டிருந்தது. பின்பு உடல் நலிவு ஒருவாறு ஒழுங்குபட்டதும் ஆரோக்கியத்தின் பொருட்டு அவர் தம் கிராமத்துக்கு அனுப்பப்பட்டார். அன்னையாரது பராமரிப்பில் அவர் ஜெயராம்பட்டியில் அமர்ந்திருக்கையில் அதிர்ஷ்ட வசத்தால் அக்கொடிய நோய் மீண்டு மொருமுறை வந்துவிட்டது. இப்பொழுது அதன் கொடுமை பன்மடங்கு அதிகரித்தது. பெற்ற

தாயார் அதை முன்னிட்டுப் படாத பாடுபட்டார். தமது வறுமைக்கிடையில் அகப்பட்ட ஔஷதங்களை யெல்லாம் கையாண்டு பார்த்தார். ஆனால் நோய்மட்டும் தீர்ந்தபாடில்லை. தப்பிப் பிழைப்பது சந்தேகம் என்றனர் பலர். இச்செய்தி தக்ஷிணேசுவரத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் காதுக்கும் எட்டிற்று. "பிறவிப் பயன் முழுதும் பெறுமுன்பே அவள் மாண்டொழிவளா?" என்று அவர் சிறிது ஏக்கமுற்றிருந்தார்.

நோய் வாய்ப்பட்டு வருந்திக் கொண்டிருந்த சாரதா தேவியின் மனதில் ஒருநாள் திடீரென்று ஓர் எண்ணம் உதித்தது. யாரிடத்திலும் ஒன்றும் சொல்லாது அவர் அக்கிராமத்தில் எழுந்தருளியிருந்த சிம்மவாஹினி தேவியின் சந்நிதிக்குச் சென்று, 'ஹடிய' விரதம் எடுத்துக் கொண்டார். தெய்வாதீனமாகச் சிகிச்சை ஏற்படாவிட்டால் பட்டினி கிடந்து மாய்வது அவ்விரதத்தின் நோக்கமாகும். அவ்வாறு தீர்மானித்துக் கோயில் வாயிலில் படுத்துக்கிடந்த அவருடைய உடல்நிலை மேலும் விரைந்து கேடடைந்து வந்தது. வயிற்றுக் கடுப்புடன் உடலும் வீங்குவதாயிற்று. கண்ணிலும் மூக்கிலும் சதா நீர் வடிந்துகொண்டிருந்தது. கண் பார்வையும் மங்கிவிட்டது. பரிதாபகரமான அந்நிலையிலும் அம்பாள் திருவுளப்படி யாகுக வென்று அவர் அமைதி புற்றிருந்தார். இரண்டுவித சிகிச்சைகளை தேவி கனவில் தோன்றிச் சொல்லியதாகவும், அவைகளைக் கையாண்ட சொற்ப நாளில் உடல் நலனுற்றதாகவும் அவர் பிற்காலத்தில் தெரிவித்தார்.

ஜெயராம்பட்டியில் நவமுகர்ஜி என்னும் பிராம்மணர் வருஷந்தோறும் தேவி பூஜையைச் சிறப்பாகச் செய்துவந்தார். சியாமா சுந்தரி அம்மையோ

கூலிவேலை செய்வதற்கிடையிலும் கொஞ்சம் நெல் சம்பாதித்து அப் பூஜைக்குக் கைங்கரியமாகக் கொடுப்பார். ஏதோ ஒரு சச்சரவை முன்னிட்டு ஒரு வருஷம் நவமுகர்ஜி யானவர் சியாமா சுந்தரியிட மிருந்து நெல்லைப் பூஜைக்கு ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். தேவி வழிபாட்டுக்காகச் சம்பாதித்த நெல் பயன்படாது போய் விடுமே என்று அவ்வம்மை இரவெல்லாம் அழுது புலம்பிக் கொண்டிருந்தார். அப்பொழுது தேவி ஜகதாத்திரி அம்மாதின் முன்னிலையில் பிரசன்னமாகி, அவர் சக்திக்கு ஏற்றவாறு தம் வீட்டிலேயே தேவி பூஜை செய்ய வேண்டு மென்று அனுக்கிரகித்தாள். அதுமுதல் வருஷந்தோறும் சியாமா சுந்தரி அம்மையாரது இல்லத்தில் தேவி பூஜை எளிய முறையில் நடைபெறுவதாயிற்று. வசதி வாய்க்கும் பொழுதெல்லாம் ஸ்ரீ சாரதா தேவி அப் பூஜையின் பொருட்டுத் தாம் பிறந்த கிராமத்துக்குப் போவதுண்டு. பிற்காலத்தில் இக் கிராமத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் கிளை ஸ்தாபனம் இப் பூஜையை இக் காலத்திலும் செய்து வருகிறது.

அன்னை 1877-ம் ஆண்டு ஜெயராம்பட்டிக்குச் சென்றிருந்த போது மாமியார் ஸ்ரீமதி சந்திரா தேவி தக்ஷிணேசுவரத்தில் காலமாய் விட்டார். பிறகு அவர் 1881-ம் வருஷம் கிராமத்துக்குச் சென்று கொஞ்ச நாள் அங்குத் தங்கியிருந்து விட்டுத் தாயாருடன் திரும்பிவந்தார். அப்பொழுது ஹிருதயர் அவர்களை அவமானப்படுத்தி அங்கிருந்து மறுபடியும் ஜெயராம்பட்டிக்கு விரட்டி யோட்டி விட்டார். இறுமாந்திருந்த ஹிருதயர் அன்னையாரிடத்தும் அவரது உற்றாரிடத்தும் அவமரியாதையாக நடந்துகொண்டதைப் பார்த்து

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மிக வருந்தினர். தாம் தலையிட்டால் சச்சரவு இன்னும் பலத்து விடுமென்றெண்ணி அவர் சும்மா இருக்க வேண்டியதாயிற்று. காளி கோயிலை விட்டுப் புறப்படும்போது சாரதா தேவி அம்பாள் சன்னிதிக்குச் சென்று, "தாயே, உன் திருவுள மிருக்குமாயின் நான் திரும்பவும் இங்கு வந்து சேருவேன்" என்று வணங்கிவிட்டுச் சென்றார். பிறகு சொற்ப நாளைக்குள் கோயில் அதிகாரிகள் ஹிருதயர்மீது அதிருப்தி யடைந்து அவரை வெளியே அனுப்பிவிட்டார்கள். அதிலிருந்து அவருடைய நற்காலம் போய்விட்டது. பலவிதமான துன்பங்களுக்கு ஹிருதயர் ஆளானார். இதைப்பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணர் முன்னமே எச்சரிக்கை செய்திருந்தார். "நீ, என்னிடத்தில் அவமரியாதையாய் நடந்து கொள்வதில் குற்றமில்லை. ஆனால் அவள் மனம் புண்படும்படி செய்வாயானால் அதனால் உனக்குண்டாகும் கேட்டை மும்மூர்த்திகளும் விலக்க முடியாது. ஜாக்கிரதையாயிரு" என்றார். அக்கூற்று இப்பொழுது முழுதும் நிரூபிக்கப்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குத் திருத்தொண்டு செய்துகொண்டு உயர்ந்த அந்தஸ்தில் இருந்த ஹிருதயர் பின்பு துன்பம் நிறைந்த கீழ்மக னாய்விட்டார்.

ஹிருதயரால் விரட்டி யோட்டப்பட்டதற்கு முன்பு ஒரு தடவை ஸ்ரீ சாரதா தேவியார், மகளிர் கூட்டம் ஒன்றில் கலந்து கொண்டு ஜெயராம்பட்டியிலிருந்து தக்ஷிணேசுவரத்துக்குப் புறப்பட்டார். அடுத்து வருதற்கிருந்த சூரிய கிரகணத்தின்போது கங்கையில் ஸ்நானம் செய்தற்கு அக்கூட்டம் புறப்பட்டது. நெடும் பிரயாணம் எனினும் அது வழக்கம்போல் கால் நடையாகவே பண்ணப் பட்டது. மூன்றும் நாளன்று

ஸ்ரீ சாரதா தேவி மிகக் களைத்துப் போய்விட்டார். ஆனால் அவரை முன்னிட்டு மற்றவர்கள் வழியில் தாமதிப்பது அவசிய மன்று என்று அவர் அவர்களை முன்னேக்கிச் செல்லும்படி ஏவினர். தையல்களும் தாரகேசுவரம் சென்று காத்திருப்பதாக வாக்குக் கொடுத்து விட்டு விரைந்து சென்று மறைந்தனர். பிந்திவிட்ட தாய்க்குக் காலின் நலிவால் நடப்பது சாத்தியப்பட வில்லை. சிறிது சிறிதாக அடியளந்து நெடுவழி போய்க் கொண்டிருந்தார்.

அவர்கள் கடந்து சென்றது ஒரு பொட்டல் காடு. எங்கும் ஒரே வெட்ட வெளி. அது கொலை களவுக்குப் பேர் போன இடம். கள்ளர்கள் வழிபட்ட காளி கோவில் ஒன்றை இன்றைக்கும் அங்கே காணலாம். அக்காலத்தில் அதில் நரபலிகள் நடை பெற்ற துண்டு என்கின்றனர். ஆதலால் பகலிலுங் கூட தன்னந் தனியாக அந்த வனாந்தரத்தில் செல்ல யாரும் அஞ்சுவார். இத்தகைய இடத்திலே துணையற்றவராய் அம்மையார் நகர்ந்து கொண்டிருக்கிறார். இவ்வளவு தூரம் தாம் பிந்திவிடுவாரென்று அவராவது அவரைப் பின்விட்டுச் சென்ற மங்கையராவது எதிர்பார்க்க வில்லை. கணப்பொழுதும் களைப்பறியாத கதிரவனும் மேற்றிசையில் விரைந்தோடி வீழ்ந்து மறைகிறான். உருகிய பொன் போன்று திகழ்ந்த மேகமும் தன் ஒளியை இழக்கிறது. படம் வரைந்தாலன்ன இயற்கை பரம சாந்தியில் சயனித்திருக்கிறது. படலம் படலமாய் இருளும் வந்து சூழ்கிறது.

மங்கிய வெளியில் கார் இருள் போன்ற உருவம் ஒன்று திடீரென்று தென்படுகிறது. நெற்றி யளவு கையில் கழியொன்று தாங்கிய அப்பாருத்த வடிவம்

அம்மையை நோக்கி விரைந்து வருகிறது. அதைப் பின் தொடர்ந்து சொற்ப தூரத்தில் மற்றொரு மெல்லிய உருவமும் வருகிறது. இந்நிலைமையில் அகப்பட்டுக் கொண்ட யாருடைய மனதுதான் ததத்தளிக்காது? ஆனால் அம்மையார் பெற்றிருந்த அமைதி அணுவளவும் குலையவில்லை. வெளியுலகில் போன்று அவரது மனத் தகத்தும் சாந்தம் திகழ்ந்தது. மேலும் தமக்கு நிகழப் போவதைப் பொறுமையுடன் எதிர்பார்த்து நின்றார் ஸ்ரீ சாரதா தேவியார்.

"இவ்வேளையில் இங்கு தனியாய் நிற்பது யார்?" என்று அருகில் வந்த மனிதனது கடுங்குரல் அதட்டிக் கர்ச்சித்தது.

"அப்பா! நான் உம் குழந்தை சாரதை. கங்கா தீரத்தில் இருக்கும் உமது மருமகனிடம் போகிறேன்" என்றார், அச்சம் அறியாத அம்மையார்.

இதற்குள்ளாக அம்மனிதனது மனைவியும் அண்டையில் வந்தாள். பெண்பால் ஒருத்தியைக் கண்டதும் அவளது கரங்களைப் பற்றிக் கொண்டு "அம்மே, நல்ல வேளையில் அப்பாவும் நீயும் இங்கு வந்தீர்கள். என்னுடன் வந்தவர்கள் தாரகேசுவரம் போய்விட்டார்கள். நடக்க முடியாது நான் என்ன செய்வதென்று ஏங்கிக் கொண்டிருந்தேன். நீங்கள் இங்கு வராதிருந்தால் என் பாடு என்ன ஆயிருக்குமோ!" என்றார்.

நம்பிக்கை ததும்பிய இவரது எளிய சொல் அக் கொடூர மனிதனது மனதை அறவே கவர்ந்தது. அவனது வல்லியல்பு மெல்லியல்பாய் மாறியது. அவர்கள் சாரதையைத் தங்கள் சொந்த மகளாகக் கருதி ஆறுதல் சொன்னார்கள். யானையை அடித்து உருட்டிக்கொண்டு ஓடவல்ல நீர்ப்பெருக்கு, சிறுமீன் அதனெதிரே நீந்து

தற்கு இடங்கொடுக்கிறது. ஏனென்றால் அச்சிறு மீன் நீரையே கதியென்று நம்பியிருக்கிறது. அது போன்று கல் நெஞ்சம் படைத்த கொலைபாதகனும் தன்னிடம் முழு நம்பிக்கை வைத்து அடைக்கலம் புகுபவர்க்கு உதவி புரிகிறான். அத்தகைய நற்குணமும் ஒரு புறம் அவனிடத்து மறைந்திருக்கிறது. அவனிடத்து அந் நல்லியல்பை ஓங்குவித்தார், நன்மையில் நனி சிறந்த நம் அன்னையார். இந்நெருக்கடியில் வீரன் அல்லது விவேகி ஒருவன் வேறு எதைத்தான் செய்திருக்கக் கூடும்!

அக்கொள்ளைக்காரனும் அவனுடைய மனைவியும் தங்கள் 'மகளை' அருகில் இருந்த ஒரு கிராமத்துக்கு அழைத்துச் சென்று, அகப்பட்ட பண்டங்களைக் கொண்டு சிறிது ஆகாரம் பண்ணிவைத்தனர். பிறகு படுத்துறங்குதற்கு அம்மாது தன் துகிலைக்கொண்டே படுக்கையும் ஆயத்தப்படுத்திக் கொடுத்தாள். தங்கள் புதல்வி இரவில் நல்லுணவு அருந்தவில்லை யென்று எண்ணிய அவர்கள் அதிகாலையில் எழுந்து வேண்டிய பொருள்களைச் சேகரித்தனர். சிறிது நேரத்துக்குள் அம்மணிக்கு நாவுக்கினிய அமுது பண்ணிவைத்து அவளைத் தாரகேசுவரத்துக்கு அழைத்துச் சென்றனர். சாரதா தேவியின் கதி என்னாயிற்றோ வென்று அஞ்சி யிருந்த ஏனைய பெண்மக்கள் அவரைக்கண்டதும் அடங்கா ஆனந்த மடைந்தனர். தேவியாரும் தமது 'அம்மையப்பர்' இருவரையும் அம்மகளிர்க்கு அறிமுகம் செய்துவைத்தார்.

கோயிலில் தாரகேசுவரர் தரிசனம் செய்தபின்பு அங்கிருந்து புறப்படுதற்கு ஏற்பாடு செய்தனர். தம்மை ஆபத்தினின்று அன்புடன் ஆதரித்த அம்மையப்பரது பிரிவை ஆற்றாமையால் சாரதா தேவி கண்ணீர் சிந்தி

னர். பராமரிப்பாளர்களும் துயரத்தில் மூழ்கினர். பெற்றவளது பற்றுதலுக்கு ஒப்பச் சாலப்பரிந்து அன்பு காட்டிய பெண்மணியானவளோ விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள்! ஒருநாட் பழக்கத்தில் அவர்களுடைய கேண்மை அவ்வளவு வலுத்துவிட்டது. கிளைப் புற்றபோது வழியில் அருந்துதற்குப் பட்டாணிக்கடலை கொஞ்சம் தன் மகளது முன்தானையில் அவள் ஒரு சிறு மூட்டையாகக் கட்டி யனுப்பினள். வசதி யேற்படும்போது அவர்கள் இருவரும் தக்ஷிணேசுவரத்துக்கு வரவேண்டுமென்று புதல்வி பரிந்து வேண்டினள். ஆதலால் அந்த முரடனும் அவனது மனைவியும் சொற்ப நாளைக்குப் பிறகு தங்கள் மகளைக்காணக் கொஞ்சம் பட்சணம் கையில் எடுத்துக்கொண்டு தக்ஷிணேசுவரம் வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவர்களது செயலைக் கேள்வியுற்று மாமனர் மாமியார் போன்று மரியாதையுடன் அவர்களைப் பாராட்டினர். மற்றும் இரண்டொரு முறை அவர்கள் தக்ஷிணேசுவரத்துக்கு வந்ததுண்டு. கொடியவர்களிடத்தும் நற்குணங்கள் சில வாய்ப்பதுண்டு என்று சொல்ல நேரிடும் போதெல்லாம் ஸ்ரீ சாரதா தேவியார் இவர்களைக் குறிப்பிடுவார். ஆனல் அவர் எப்பொழுதும் அவ்வம்மையப்பரைப் போற்றிக் கருத்தில் வைத்திருந்தார்.



ஒன்பதாம் அத்தியாயம்

# தற்கோண்டார் திருமேனி துடைத்தல்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு உண்டா யிருந்த தொண்டை வலிக்குச் சிகிச்சை செய்தற் பொருட்டு அவர் 1885-ம் ஆண்டின் பிற்பகுதியில் கல் கத்தாவில் சியாம்புகூர் எனும் இடத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அத்துடன் அவருடைய தக்ஷிணேசுவர வாழ்க்கை முடிவுபெற்றது. ஆனால் அன்னை சாரதா தேவியார் மட்டும் இன்னும் சில மாதம் அக்கோயிலி லேயே வசித்திருந்தார். அவர் இராமாயணம் போன்ற புஸ்தகங்கள் படிக்கக் கற்றுக்கொண்டிருந்தார் என்றும், ஆனால் எழுதும் பயிற்சி அவருக்கு உண்டாகவில்லை யென்றும் முன்னமே சொல்லப்பட்டது. ஓய்வு நிறைந்த இக்காலத்தில்தான் அவர் ஒரு சிறுமியின் உதவியைக் கொண்டு புஸ்தகங்கள் படிக்கக் கற்றுக்கொண்டார்.

பரமஹம்ஸ தேவரை வாட்டிய பிணி அதிகரித்துக் கொண்டே போயிற்று. தக்க முறையில் அவருக்கு உணவு பக்குவப்படுத்திக் கொடுக்க ஒருவர் தேவையா யிருந்தது. ஆதலால் ஸ்ரீ சாரதாதேவியார் சியாம்புகூ ரிலும், பிறகு காசிப்பூர் தோட்டத்திலும் குருதேவ ரது அருகாமையில் இருந்து அரும்பணியாற்றச் சென் றார். பெண்டிர்கள் வசிப்பதற்கு ஏற்ற வசதிகள் அவ் விரண்டு வீடுகளிலும் இல்லை. மாடியில் அன்னைக் கென்று ஒரு சிறு அறை ஒழித்துத் தரப்பட்டது. நாணமுடைய அவர் ஆடவர் இருக்கும் இடங்களில் தென்பட மாட்டார். இரவில் மற்றவர்கள் எல்லாரும்

உறங்கிய பின்பும், அதிகாலையில் மற்றவர்கள் எழுந்திருக்கு முன்பும் அவர் மாடியைவிட்டுக் கீழே வருவதுண்டு. நள்ளிரவில் அவருக்குக் கிடைத்த உறக்கமும் மிகக் குறைவு. மாடியில் இருந்துகொண்டே மருத்துவரது கருத்துப்படி அவர் கஞ்சி வகைகளைச் சித்தப்படுத்தி, சிஷ்யர் சிலர் மூலம் நோய்வாய்ப்பட்டிருந்த அண்ணலுக்கு அனுப்பி வைப்பார். அன்னியர் யாருமில்லாத வேளைகளில் அவர் பரமஹம்ஸர் அருகில் சென்று பணிவிடைகள் செய்வார். தாம் அவ்வீட்டில் வசிப்பதுகூட யாருக்கும் தெரியாதபடி அவ்வளவு அமரிக்கையுடன் அவர் நாட்களைக் கழித்து வந்தார்.

மேலான மருத்துவ முறையும் பாங்குடைய பராமரிப்பும் கையாளப்பட்டன வெனினும் பரமஹம்ஸருடைய நோய்மட்டும் குணமடையவில்லை. ஆதலால் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் தாரகேசுவரர் சந்நிதிக்குச் சென்று அவரது நோய் ஒழியும் பரியந்தம் குறையிரப்பதாகத் தீர்மானித்தார். வேண்டுவார் வேண்டியவைகளை வகுத்தளிக்க வல்லவன் அந்த ஆலயத்தின்கண் எழுந்தருளியுள்ள சிவபெருமான். துயரத்துடன் அன்னை ஆங்குச் சென்று அன்னபானமில்லாது தொடர்ந்து இரண்டு நாள் சந்நிதியில் வீழ்ந்து வழுத்திய வண்ணமா யிருந்தார். இரண்டாம் நாள் இரவு அவர் ஓர் அதிசயம் கண்டார். அடுக்கு அடுக்காக வைத்திருந்த மட் பாண்டங்களை யாரோ ஒருவர் உடைப்பது போன்று அவருக்குத் தென்பட்டது. உடனே உள்ளத்தில் ஓர் உயர் ஞானமும் ஒளிர்ந்தது. அழியும் உடலை அழியாதிருக்கச் செய்ய யாருக்குத்தான் இயலும்! சரீரம் அநித்தியமான தென்றும் அதன் பொருட்டு வருந்துவது அறிஞர் செயலன்று

என்றும் உணர்ந்த அவர் கடவுளை வழுத்திவிட்டுக் காசிப்பூர் தோட்டத்துக்குத் திரும்பினார். குருதேவரும் அன்னையார் அடைந்த அனுபவத்தையே ஊர்ச்சிதப் படுத்தினார். "காயம் நிலையற்றதல்லவா? அதைக் குறித்து யார்தான் கடவுளிடம் குறையிரப்பார்?" என்று அவர் கேட்டார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தம் உடலை உகுக்கும் காலம் அணுகியது. மரணத்தின் தத்துவத்தை அறிந்த அன்னையாரும் அதனால் விளையும் துயரத்தைத் தாங்கவல்ல மனவுறுதியைப் பெற்றுவந்தார். 1886-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் பதினாறாந் தேதி திங்கட்கிழமை அதிகாலையில் அண்ணல் ஊன் உடல் நீத்துப் பேரொளியில் புகுந்தார். விவேகமும் வைராக்கியமும் வடிவெடுத்தவர் எனினும், அன்னையாரது உள்ளத்தில் தாற்காலிகமாகத் தோன்றிய துயரம் தாங்கவொண்ணாததாயிருந்தது. தமது ஆருயிர்த் துணைவர் திருமேனி துடைத்த பின்பு, உலக வாழ்க்கையே இருள் சூழ்ந்தது போன்று அவருக்குத் தென்பட்டது. ஹிந்து லௌகிகத்துக்கு ஒப்ப விதவைவேடம் பூண அவர் முற்பட்டார். அதற்கேற்ற சடங்குகள் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் ஸ்ரீ ராமகிருஷ்ணரது திருக்காட்சி திடீரென்று அவர் முன் தோன்றிற்று. "நீ யாது செய்கின்றாய்? நான் மாய்ந்துபோய் விடவில்லையே! ஓர் அறையினின்று மற்றோர் அறைக்குப் போனது போன்றிருக்கிறது நான் இப்பொழுது அடைந்துள்ள நிலை. இத்தகைய கைம்பெண் கோலம் எதற்காக?" என்றார் காட்சியில் தோன்றிய பரமஹம்ஸ தேவர். இந்த அனுபவத்தால் அன்னையும் அளவற்ற ஆறுதல் அடைந்தார். பிறகு அவர் ஆயுள் முழுதும் சுமங்கலியின் சின்னங்கள்

சிலவற்றை அணிந்திருந்தார். உலகத்தவர் சிலர் இதற்கு ஆட்சேபம் செய்தனர் எனினும், ஆட்கொண்டவரது ஆக்ஞையை மீற அவர் துணியவில்லை. தவிர, தம் தலைவர் யாண்டும் தம்மோடு இருப்பது தேவியார்க்குப் பிரத்தியக்ஷமாக விளங்கிற்று. ஞானத்தாயின் தீஞ் செயலானது இருள் சூழ்ந்த உலகத்தவரின் லௌகிக இயல்புக்கு உட்பட்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை யன்றோ?

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் திருமேனி தகனம் செய்யப்பட்டது. அதில் எஞ்சியிருந்த சாம்பலை ஒரு பெட்டகத்தில் வைத்து ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்து அதன் வாயிலாக அவருக்கு நித்திய பூஜை செய்வதாக சிஷ்யர்கள் முடிவு கட்டினர். ஆனால் அத்திருநீறு யாருடைய கைவசத்தில் இருப்பது என்பதைப் பற்றி கிரகஸ்தர்களுக்கும் சந்நியாசிகளுக்கு மிடையில் விவாதம் வந்தது. அச்செய்தி அன்னையாரிடம் கொண்டுபோகப்பட்டது. அதற்கு அவர் "ஒண் பொருளைப் புறக்கணித்துவிட்டுப் பொருக்குக்காகச் சண்டை யிடுகின்ற பாடமா, இவர்கள் பரமஹம்ஸ தேவரிடமிருந்து கற்றுக்கொண்டனர்!" என்று வியந்தார். அந்தத் திருநீறு சந்நியாசிகளால் பரிபாலிக்கப்பட்டு, இன்றும் அது கல்கத்தா தலைமை மடத்தில் ஆராதிக்கப்படுகிறது.



## பத்தாம் அத்தியாயம்

# தீர்த்த யாத்திரை

தாம் தீர்த்தயாத்திரை அதிகமாகச் செய்யவில்லை யென்றும், ஆனால் தமக்குப் பதிலாக ஸ்ரீ சாரதா தேவி யார் பல க்ஷேத்திரங்களுக்குப் போகவேண்டுமென்றும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்திருந்தார். அவர் காலஞ் சென்று இரண்டு வாரத்துக்குள் அன்னை யார் ஸ்தலயாத்திரை போகவேண்டுமென்று சிஷ்யர்கள் முடிவுகட்டினர். அவருடைய துயரத்தைத் துடைப்ப தற்கு அது தக்கதோர் உபாயமாயிருந்தது. மேலும் தீர்த்தயாத்திரையின் பூரண பலனை அடைதற்கேற்ற மனநிலையும் அதுபோழ்து அவருக்கு உண்டாயிருந்தது.

சந்நியாசி சிஷ்யர்களுள் சுவாமி யோகானந்தர், அபேதானந்தர், அத்புதானந்தர் ஆகிய மூவரும், ஸ்திரீ களுள் லக்ஷ்மிதேவி, கொலாப் அம்மை ஆகிய இரு வரும், கிருகஸ்த சிஷ்யருள் ஸ்ரீ மகேந்திரநாத குப்த ரும் அவருடைய பாரியாளும் ஆகிய இவர்கள் எல்லா ரும் அன்னையாருடன் யாத்திரை புறப்பட்டனர். வைத்திய நாதம், காசி, அயோத்தி, பிருந்தாவனம் முதலிய பதி களைப் பார்க்க உத்தேசித்து அவர்கள் சென்றனர். ஞானத்துக்கு உறைவிடமாகிய காசியில் அன்னையார்க்கு அடிக்கடி பரவச நிலை வந்துவிடும். கங்கையில் நீராடி விசுவநாதர் தரிசனம் செய்துகொண்டிருந்தது மல்லாது, சாது மகாத்மாக்களைச் சென்று தரிசிப்பதும் ஒரு முக் கியமான அலுவலாயிருந்தது. அவர்களுள் பாஸ்கரா னந்த சுவாமிகளின் மகிமையை அன்னையார் மிகவும்

பாராட்டிப் பேசினர். அப்பெரியாரது மனது யாண்டும் பரத்தினைச் சார்ந்திருந்தது என்றும் அவர் சொன்னர்.

பராபக்திக்கு உறைவிடம் என்று சொல்லவேண்டும் பிருந்தாவனத்தை. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ராதாகிருஷ்ண வடிவெடுத்து வந்து அன்பின் அதிசயங்களை நடாத்திக்காட்டிய இடம் அதுவே. அங்குச் சென்ற பொழுதே அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் உள்ளத்தில் ஆர்வம் பொங்கிற்று. கிருஷ்ணனைக் காணுமையால் ஸ்ரீமதி ராதை உழந்த துன்பத்தையே இவரும் ஈண்டுத் துய்க்கலானர். தொடர்ந்து ஒரு வருஷம் அவர் அப்புண்ணிய க்ஷேத்திரத்திலேயே வசித்திருந்தார். அதுபோழ்து இரவும் பகலும் ஓயாது இறைவனது வழிபாட்டிலும் தியானத்திலும் காலங் கழிக்கப்பட்டது. பிருந்தாவன வாழ்க்கையின் ஆரம்ப தசையில் அவர் மெய் சிலிர்த்துத் தைல தாரை போன்று கண்ணீர் சிந்திக் கசிந்துருகி அழுதவண்ணமாயிருந்தார். அருள்தாகத்தின் வேகம் அவருடைய மனதை அறவே புதுப்பித்துவிட்டது. குருதேவர் மீண்டுமொரு முறை அவருக்குக் காட்சி கொடுத்துத் தாம் யாண்டும் அவரோடிருப்பதாகச் சொல்லிய பின்பே அன்னையாரின் அருள்வேட்கை அடங்கிற்று.

பிருந்தாவனத்தில் ராதாரமணன் கோயிலுக்கு அன்னையார் சென்றிருந்தபொழுது தமக்கு வரமொன்று தந்தருளவேண்டுமென்று அவர் பகவானைப் பரிந்து பிரார்த்தித்துக்கொண்டார். "இறைவ, பிறரிடத்துள்ள குற்றத்தைக் காண்பதே மனதின் இயல்பு. எனக்கு அத்தகைய மனது வேண்டாம். அதை அடியோடு என்னிடத்திலிருந்து நீக்கிவிடு. எத்திசையில் எவரெவரைக் காண்கிலும் அவரவர் நற்குணமே என் கருத்தில்

படுக" என்பது அவர் செய்த விண்ணப்பம். அதன் பயனாக அவருடைய இயல்பு அடியோடு மாறிவிட்டது. நல்லியலாள் என்று நம் ஞானத்தாயைத்தான் நவில வேண்டும். மகா பாபிகளிடத்தும், மறைந்திருந்த குணத்தையே அவர் காண்பார். குற்றமொன்றும் அவர் கண்ணுக்குத் தென்படாது. மனமெப்படியோ அப் படியே உலகம் காட்சி கொடுக்கிறது என்பர் வேதாந்தி கள். நல்ல மனமுடைய நம் தாய்க்கு உலகமுழுதும் நல முடையதாகவே காட்சி கொடுத்தது. "பிறரிடத்துள்ள குற்றத்தைக் காண்பவருடைய மனதில் மாசு படிந்து விடுகிறது. அதனால் யாருக்கும் நன்மை விளைவதில்லை. குணத்தைக் காண்பதால் காண்பவர் காணப்படுபவர் ஆகிய இருதரத்தாரும் மேன்மை யடைகின்றனர்" என்று அன்னையார் பிற்காலத்தில் பலருக்குப் போதித்த துண்டு. இக்காலத்தில் உலகம் இப்போதனையைப் பெரிதும் வேண்டி நிற்கிறது. எளியது எனினும் பெருநன்மை பயக்கவல்லதன்றோ இது ?

அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்துக்குச் சென்ற வுடனே அருள்தாகத்தால் கண்ணீரும் கம்பலையுமாகத் துவங்கிய அவருடைய வாழ்க்கை நாளேற ஏறச் சாந்த சொரூபமாக மாறிவிட்டது. பரமானந்தம் எப்பொழு தும் அன்னையிடத்திருந்து பொழிந்துகொண்டிருக்கும். பரவசநிலை யடைந்து அவர் நெடுந்தூரம் யமுனைக்கரை யோரத்தில் நடப்பார். அப்பொழுது தோழிமார் பின் சென்று அவரைத் திருப்பிக்கொண்டு வருவார்கள். இதுபோழ்து அவருடைய சுபாவமும் சிறு குழந்தை யின் சுபாவத்தைப் போன்று ஆகிவிட்டது. ஏழு வய துக் குமரிபோன்று கள்ளங்கபட மற்றவராய் அவர் நடந்து கொள்ளுவார். பாலா என்று அம்மையை

அழைப்பது முற்றிலும் பொருந்தும். இங்ஙனம் ஓராண்டு அப்பதியின்கண் கழிந்த பிறகு அன்னையாரும் அவரோடு தங்கியிருந்த மற்றவர்களும் ஹரித்துவாரம், ஜயப்பூர், புஷ்கரம், பிரயாகை முதலிய தீர்த்தங்களுக்குச் சென்றுவிட்டுக் கல்கத்தாவுக்குத் திரும்பினர்.

1888-ம் வருஷம் ஏப்ரில் மாதம் அன்னையார் மறுபடியும் கயைக்கு யாத்திரை போனார். அதற்கு அருகாமையில் புத்தகயை இருக்கிறது. புத்தர் போதி சத்துவம் அடைந்த இடம் அது. அதைக் கண்டு தரிசிப்பதற்கும் அன்னையார் சென்றிருந்தார். ஆங்கு ஒரு பெரிய மடாலயம் இருக்கிறது. அதைப் பார்த்ததும் அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறித்து அழுது இங்ஙனம் பிரார்த்தித்தார். “இங்கே சாதுக்களுக்கு சௌகரியங்கள் அனைத்தும் அமைந்திருக்கின்றன. ஆனால் துறவிகளாகிய நம் குழந்தைகளுக்கோ தங்க இடமில்லை. அவர்களுக்கு உண்ணுதற்குப் போதிய அளவு உணவுமில்லை. இங்குமங்கும் அலைந்து அலக்கண் படுகின்றனர்.” இவ்வாறு அவர் பிரார்த்தனை பண்ணிய சில வருஷங்களுக்குப் பிறகே ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துத் தலைமை ஸ்தானமாகிய பேலூர் மடம் கங்காதீரத்தில் கல்கத்தாவுக்கு அருகாமையில் ஸ்தாபிக்கப்பட்டது.

அதே ஆண்டின் இறுதியில் அன்னையார் பூரி ஜகந்நாதர் கோயிலுக்குப் போயிருந்தார். அப்பொழுது ஸ்ரீமத் சுவாமி பிரம்மானந்தரும் இன்னும் சில சந்நியாசி சிஷ்யர்களும் அவருடன் சென்றிருந்தனர். சுமார் நான்கு மாதகாலம் அவர் அந்த க்ஷேத்திரத்திலேயே வாசம் பண்ணினார். ஜகந்நாதரை வழிபட்டு விட்டு லக்ஷ்மி தேவியின் சந்நிதியில் அமர்ந்து அவர் நிஷ்டை புரிவார். ஜகத்துக் கெல்லாம் நாதனாகிய மகாவிஷ்ணு

இரத்தினங்களால் இழைக்கப்பெற்ற பீடத்தின்கண் வீற்றிருக்கத் தாம் அவருக்குக் கைங்கரியம் செய்வது போன்று அன்னையார் அப்புண்ணிய க்ஷேத்திரத்தில் இருந்தபொழுது உணர்ந்தார். இன்னும், அங்கு ஸ்தாபிக்கப்பட்டிருந்தது உண்மையில் விஷ்ணுவின் விக்கிரகமல்லவென்றும், அது ஒரு சிவலிங்கமென்றும் மற்றொரு ஞானக் காட்சி அவருக்கு உண்டாயிற்று. (சரித்திரக்காரர்கள் அபிப்பிராயமும் இதுவே. பூரி ஆதியில் ஒரு பௌத்த ஸ்தலமாயிருந்தது. ஆதி சங்கரர் காலத்தில் அது சிவ ஸ்தலமாக மாற்றப்பட்டது. பின்பு வைஷ்ணவர்கள் ஆதிக்கத்தில் அது ஜகந்நாதன் எனும் பெயருடைய கிருஷ்ணன் கோயிலாகத் திருத்தியமைக்கப்பட்டது. இதுவே சரித்திர ஆராய்ச்சிக்காரரது முடிவு.) இன்னும் இரண்டு மூன்று தடவைகளில் அன்னையார் காசி, பிருந்தாவனம், பூரி முதலிய இடங்களுக்குச் சென்று க்ஷேத்திர வாசம் செய்தார். அதுபோழ்து அவருடைய உறவினர்களும் சிஷ்யர்களும் அவருடன் சென்றனர்.

தக்ஷிண தீர்த்த யாத்திரையின் பொருட்டு அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் 1909-ம் வருஷம் டிசம்பர் மாதம் புறப்பட்டார். வழியில் ஒரிசா மாகாணத்தில் கோதார் எனும் ஊரில் அவர் இரண்டு மாதம் தங்கியிருந்தார். அப்பொழுது அவ்வூரில் தபாலாபீசில் தலைமை உத்தியோகஸ்தரா யிருந்த தேவேந்திர நாத சட்டர்ஜி என்பவர் தாம் கிறிஸ்து மதத்தைத் தழுவியதைக் குறித்து வருந்துவதாகவும், ஹிந்து தர்மத்துக்குத் திரும்பிவர விரும்புவதாகவும் அன்னையாரிடம் வந்து தெரிவித்தார். அதற்கு அவர் தமது சந்நியாசி சிஷ்யர் இருவரை அழைத்து அம் மனிதருக்கு வைதிக-

சம்ஸ்காரம் செய்து வைத்து யக்ஞோபவீதமும் காயத்திரி மந்திர உபதேசமும் செய்து வைக்கும்படிச் சொன்னார். பிறகு அந்தத் தபால் அதிகாரிக்கு அன்னையார் தாமே இஷ்ட தேவதை மந்திர தீக்ஷை பண்ணி வைத்தார்.

மொத்தம் ஒன்பது பேர் அடங்கிய அன்னையாரின் திருக்கூட்டம் 1910-ம் வருஷம் பெப்ருவரி மாதத்தில் சென்னைக்கு வந்து சேர்ந்தது. அப்பொழுது சென்னை மடத்து ஸ்தாபகராகிய ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் அவர்களுக்கு நல்வரவளித்து சுமார் ஒரு மாதம் அன்னையார் அங்கே தங்கியிருக்க வேண்டுமென்று வேண்டினார். அன்னையாரும் அதற்கிசைந்து அங்கு வசித்து அவ்விடத்தைப் புனிதப்படுத்தினார். அதுபோழ்து பலபேர்க்கு அவர் மந்திர தீக்ஷையும் செய்துவைத்தார். சென்னையில் அவரிடம் குழுமிய மாதர்களுடன் பேச அவருக்குப் பொது பாஷை யொன்றும் இல்லாதிருந்தும் அவரவர் குறைகளையும் சந்தேகங்களையும் அன்னையார் எளிதில் உள்ளபடி உணர்ந்து, அவைகளை அகற்றியும் வைத்தார். அவரைச் சந்தித்தவர்களுள் ஐயம் தெளிவடையாதவர் யாருமில்லை எனலாம். மனம் மனதோடு பேசுதற்கு மொழி முற்றிலும் வேண்டப்படுவதன்று என்பதை அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் நன்கு நிரூபித்துக் காட்டியுள்ளார். பிற்காலத்தில் ஐரோப்பாவினின்றும் அமெரிக்காவினின்றும் தம்மைத் தரிசிக்க வந்த மேல் நாட்டு மாதரோடும் மொழியின் உதவியின்றியே உறவாடவும் கருத்துக்களைத் தெரிவிக்கவும் அவருக்கு இயன்றது.

சென்னையினின்று ராமேசுவரத்துக்குப் புறப்பட்ட பொழுது சுவாமி ராமகிருஷ்ணானந்தரும் அன்னை

யாரது திருக்கூட்டத்தில் சேர்ந்துகொண்டார். வழி யில் மதுரையில் அவர்கள் ஒருநாள் தங்கியிருந்துவிட்டு ராமேசுவரம் போய்ச் சேர்ந்தனர். அப் பதியை அடைந் ததும் தமது மாமனார் க்ஷுதிராம் சட்டோபாத்யாயரின் அருஞ்செயலை எண்ணி, அன்னையார் பெரு வியப்படைந் தார். பல்லாண்டுகளுக்கு முன்பு பிரயாண வசதி யொன்று மில்லாதிருந்த காலத்து அப்பெரியார் ஆயி ரத்து ஐந்நூறு மைலுக்கு மேல் நடந்து வந்து இந்த க்ஷேத்திரத்தில் ராமேசுவரர் தரிசனம் செய்தார். அச் செயல் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பிறப்பதற்குச் சில வருஷங் களுக்கு முன்பு நிகழ்ந்தது. இப்பொழுது அன்னையார் இந்த ஸ்தலத்துக்கு வந்திருந்தபொழுது ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளின் பக்தராகிய ராமனாதபுரம் ராஜா, இவர் இடைஞ்சல் ஒன்று மின்றி ராமேசுவர தரி சனம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வைத்தார். தென்னிந்தியாவின் ஆலயங்களின் கர்ப்பக் கிரகத்துக்குள் அர்ச்சகரைத் தவிரப் பிறர் போகலா காது என்பது ஐதிகம். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸருக்கு வாழ்க்கைத் துணைவியாய் வாய்த்த அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் ஒருவர் மட்டும் உள்ளே சென்று தாமே அர்ச்சிக்கலா மென்று அனுமதிக்கப்பட்டார். அவ்விதமே அவரும் மூன்று நாள் ராமேசு வரர் பூஜையைத் தாமே செய்தார். அந்த க்ஷேத்திரத் தில் இருக்கும் ராமனாதபுரம் ராஜாவின் அரண்மனை யைப் போய்ப் பார்க்கவேண்டுமென அன்னையார் வேண் டிக் கொள்ளப்பட்டார். அதற் கிசைந்து அவரும் அம் மாளிகையைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அங்கு வைக்கப் பட்டிருந்த விலையுயர்ந்த ரத்தினங்களும் நகை களும் அவருக்குக் காட்டப்பட்டன. அரண்மனை அதி

காரிகளின் வேண்டுகோள் அத்துடன் நின்றுவிடவில்லை. அந்த விலையுயர்ந்த ஆபரணங்களில் இஷ்டமானவைகளை அன்னையார் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று ராஜா விண்ணப்பம் செய்திருக்கிறார் என்று உத்தியோகஸ்தர் பணிவுடன் தெரிவித்தார். இவ் வேண்டுகோள் அன்னையாரை ஒரு நெருக்கடியான நிலையில் வைத்தது. தியாக புத்தியிலும் அபரிக்கிரக விரதத்திலும் குருதேவருக்குப் பின் வாங்காத ஞானத்தாய், இவைபோன்ற பொருள்களை ஏற்றுக்கொள்ள எங்ஙனம் இசைவார்? ஆனால் நேர்முகமாக வேண்டாமென்று மறுத்து அவர்களுடைய மனதைப் புண்படுத்துவது முறையன்று. ஆதலால் அவர் ஓர் உபாயத்தைக் கையாண்டார். "உலகத்தவள் போன்று நகைகளை வைத்துக்கொண்டு நான் என் செய்வேன்? ஏதேனும் ஒரு அணியை ராதை எடுத்துக் கொள்ளட்டும்" என்று அவளுக்குக் கட்டளையிட்டார். ராதை எனும் சிறுமி அன்னையாரின் தம்பி ஒருவருடைய புதல்வி. ஆதலால் இந்த ஏற்பாடு உத்தியோகஸ்தருக்கும் உடன்பாடாயிற்று. ஒளி வீசுகின்ற வயிரம் முதலியன இழைக்கப் பெற்ற ஆபரணங்களை ராதை கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கையில் குருதேவரைக் குறித்து, "இறைவ, இக் கன்னியின் உள்ளத்தினின்று இந் நகைகளின் மீதுள்ள ஆசைகளையெல்லாம் அகற்றிவிடும்" என்று அன்னையார் ஆவலுடன் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். அதுபோழ்து அவருடைய உள்ளம் உலகப் பொருள்களை ஏற்கலாகாதென்று நடுநடுங்கிற்று. அக் குமரியும் கடைசியாக, "இவைகளில் ஒன்றும் எனக்கு வேண்டாம். நான் இப்பொழுதுதான் எழுதுகோல் ஒன்றை இழந்துவிட்டேன். அதற்குப் பதிலாக வேறு பென்சில் ஒன்று

எனக்கு வாங்கிக் கொடுங்கள்," என்றாள். அதைக் கேட்ட பின்பே அன்னையாரின் ஆவல் அடங்கிற்று. கடைக்குச் சென்று பென்சில் ஒன்று அரையணாவுக்கு அச் சிறுமிக்கு வாங்கிக் கொடுத்தார்கள். ராமேசுவரத்தினின்று அன்னையார் பெங்களூருக்குச் சென்று அங்கு ஸ்தாபிக்கப்பட்டிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் கொஞ்ச காலம் தங்கியிருந்தார். அத்துடன் அவருடைய தக்ஷிண யாத்திரை முற்றுப் பெற்றது. வழியில் கோதாவரியில் நீராடிவிட்டு ராஜமகேந்திரவரத்திலும் பூரியிலும் சில நாள் தங்கியிருந்த பின்பு ஏப்ரில் மாதத்தில் அன்னையார் கல்கத்தா போய்ச் சேர்ந்தார்.



பதினோராம் அத்தியாயம்

## நகரத்திலும் நாட்டுப் புறத்திலும்

1912-ம் வருஷம் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் சுமார் மூன்று மாதம் காசிவாசம் செய்தார். அதுவே அவருடைய கடைசியான தீர்த்த யாத்திரையுமாகும். அதுபோழ்து அவருடன் சந்நியாசி சிஷ்யர்கள் பலர் அப் பதிக்குச் சென்றிருந்தனர். காசியில் உள்ள ஆலயங்களை யெல்லாம் பார்க்க அப்பொழுதுதான் அன்னையார்க்கு இயன்றது. ஒவ்வொரு கோயிலின் மகிமையையும் ஞானக் காட்சியால் உணர்ந்து அவர் மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லுவார். ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தாரால் அங்கு நிறுவப்பட்டிருந்த வைத்திய சாலையை அவர் போய்ப் பார்த்தார். அதில் நடைபெற்ற அலுவல்களெல்லாம் அவருக்குக் காண்பிக்கப்பட்டன. குரு

தேவர் சாந்நித்தியமும் திருமகள் கடைக்கண் பார்வை யும் அங்கு நிறைந்திருப்பதாக அன்னையார் தெரிவித்தார். தம்முடைய கைங்கரியமாக ரூபாய் பத்தும் அதற்கு அனுப்பிவைத்தார். அக் காலத்தில் அங்கு வதிந்த சாதுக்களில் சாமேஸிபுரி எனும் பெரியாரை அவர் பெரிதும் போற்றினர். சாமேஸிபுரியும் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் குருவாகிய தோதாபுரியும் ஒரே குருவிடமிருந்து அனுக்கிரகம் பெற்றவர்கள். சாமேஸிபுரியும் ஸ்ரீ ராம கிருஷ்ணரின் சிஷ்யர்களை அன்புடன் பாராட்டுவார். அன்னையார் காசியினின்று திரும்பிய பிறகு தமது வாழ்நாளைக் கல்கத்தாவிலும் கிராமத்திலும் கழித்து வந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் உடலை உகுத்த பின்பு அன்னை பிருந்தாவனத்துக்குச் சென்று ஓராண்டு கடுந்தவம் புரிந்தது முன்னமே சொல்லப்பட்டது. அங்கிருந்து கல்கத்தாவுக்குத் திரும்பிய மறுநாளே அவர் கிராமத் துக்குப் போக ஏற்பாடு செய்தார். "இத் தேகம் ஒடுங்கிய பின்பு நீ கமார்புகூருக்குச் சென்று ஆங்கு எளி தில் அகப்படுவதைப் புசித்துவிட்டு ஈசுவர நாமத்தை உச்சரித்துக் கொண்டு காலங் கழிப்பாயாக," என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அன்னையார்க்குப் பகர்ந் திருந்தார். அக் கட்டளையை நிறைவேற்றுவதே அன்னை யாரின் கருத்து. ஆதலால் சிஷ்யர் சிலர் அவரை ஆங்கு அழைத்துச் சென்று விட்டுவிட்டு வந்தனர். அன்னை யாரின் வாழ்க்கையில் இருள் சூழ்ந்ததும் கஷ்டம் நிறைந் ததுமான காலம் இப்பொழுது தோன்றுவதாயிற்று. யாது காரணத்தாலோ சிஷ்யர்களுக்கும் அவருக்கும் சொற்பகாலத்துக்குத் தொடர்பு அற்றுப்போய் விட் டது. துயரப்படும் காலம் வரும்பொழுது தேவர்களும்

அதைத் தடுக்க முடியாது. கைம்பெண் ஒருத்தி கையில் வளையணிந்து கொண்டு வந்திருக்கிறாள் என்று கிராம வாசிகள் பரிகாசம் பண்ண ஆரம்பித்தனர். வீண் பழியை விலக்குதற்கு அவர் அணியைக் கழற்ற முயன்றபோது பரமஹம்ஸ தேவர் மீண்டும் தரிசனம் கொடுத்து அப்படிச் செய்யலாகாது என்று இயம்பினார். குறுகிய மனப்பான்மையுடைய கிராமவாசிகளின் பொருளற்ற பேச்சு ஒருபுற மிருக்க, மற்றொருபுறம் அன்னையாரின் வறுமை நோய் இப்பொழுது மேலோங்கிக்கொண்டு போவதாயிற்று. உற்றார் உறவினர் ஒருவரும் இப்பொழுது கமார்புகூரிலில்லை. ஜீவனோபாயத்தை முன்னிட்டு அவர்கள் எல்லாரும் கல்கத்தாவுக்குப் போய் விட்டனர். அன்னையார் தன்னந் தனியாகத் தமது புக்ககத்தில் வாழ்ந்திருக்கிறார். உண்ணுதற்குப் போதிய அளவு உணவு கிடையாது. வீட்டில் இருக்கும் நெல்லைத் தாமேகுத்திச் சமைக்கவும், அதற்குத் துணையாகக் காட்டுக் கீரையை அவித்து வைத்துக் கொள்ளவும் செய்தார். இதுவே நாட்கணக்காக அவருக்கு உணவு. உப்பு வாங்குதற்குக் கையில் காசு இல்லாது போன நாட்களும் உண்டு. வறுமை நோய் வந்து அவரை வாட்டியது பெரிதன்று. அதைப்பற்றி அவர் யாரிடத்தும் ஒன்றும் பகராதும் தாமே மனம் சலித்துக்கொள்ளாதும் அமைதியுற்றிருந்ததே ஆச்சரியம். இறைவன் விட்டவழி காலம் கழியட்டும் என்பதே அவர் கருத்து. வயோதிக தசையில் இருந்த தமது தாய் சியாமா சுந்தரி தேவியைப் பார்க்கப் பக்கத்துக் கிராமமாகிய ஜெயராம்பட்டிக்கு அவர் இரண்டொருதடவை சென்றிருந்தார். கந்தைத் துணி கட்டிக் கட்டழகெல்லாம் கரைந்துபோய், முகம் வாடி

யிருந்த தம் மகளைப் பார்த்து, "என் கண்ணே! நீ பிச்சைக்காரி வேடம் பூண்டிருப்பதைப் பார்க்கவா, நான் இத்தனைநாள் உயிரோடிருந்தேன்?" என்று அம் மாது நைந்து வருந்தலானார். யாருடைய உள்ளத்தையும் கலக்கிவிடக்கூடிய அந் நிலையிலும் நமது அருளன்னையார் சாந்தம் கலையாதிருந்து பெற்ற தாய்க்குத் தேறுதல் சொன்னார்.

ஒரு வருஷத்துக்குப் பின் அன்னையாரின் வறுமை வாழ்க்கையைப் பற்றிய செய்தி கல்கத்தாவுக்கு எட்டிற்று. 'பரமஹம்ஸ தேவரின் சிஷ்யர்கள் உயிரோடிருக்கையில் அவருடைய பத்தினியார் பட்டினி கிடந்து சாகப் பார்த்திருப்பார்களா?' எனும் கிளர்ச்சி உடனே உண்டாயிற்று. தங்கள் அருள் அன்னையாரைக் கல்கத்தாவுக்கு அழைத்துக்கொண்டு போகக் கொஞ்சம் பொருள் சேகரித்துக்கொண்டு ஆடவரும் மகளிரும் அடங்கிய ஒரு சிறு கூட்டம் கமார் புகூருக்கு வந்தது. அதைப் பார்த்த ஊரார் "வேற்றூர் சிலருடன் விதவை ஒருத்தி வெளியூருக்குப் போவது தகுமோ?" வென்று ஆட்சேபித்தனர். என் செய்வதென்று அன்னையார்க்கும் விளங்கவில்லை. அதற்குள் ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் சிறு வயதில் கூடி விளையாடிய சில கிழவிமார்கள் "கதாயின் * பெண்டாட்டி சாமானியமானவள் அல்ல. கதாயைப் போன்றே அவளும் தெய்வத்தன்மை வாய்ந்தவள். அவள் விஷயத்தில் ஒன்றும் குறை கூறாதீர்கள்"

---

* கதாதரர் என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பிள்ளைத் திருநாமம். ஆதலால் அக்கிராமவாசிகளில் மூத்தோர் அவரை '**கதாயீ**' என்று அழைப்பது வழக்கம்.

என்று எதிர்ப் பிரசாரம் செய்தனர். பிறகு தமது தாயாரிடமிருந்து உத்தரவு பெற்றுக்கொண்டு ஸ்ரீ சாரதா தேவியார் கல்கத்தா போய்ச்சேர்ந்தார். சிஷ்யர்களின் பராமரிப்பில் அவருடைய வறுமை நோயும் நீங்கிற்று.

தம்மைக் கமார்புகூர்வாசி யென அன்னையார் சொல்லிக் கொண்டாரெனினும் நாளடைவில் அவர் அக்கிராமத்துக்குப் போவதை ஒருவாறு குறைத்துவிட்டார். அவரும் அவரைத் தரிசிக்க வருபவர்களும் வசிக்கத் தக்க இடவசதி யில்லாதிருந்ததே ஒருவேளை அதற்குக் காரணமா யிருந்திருக்கலாம். கமார்புகூருக்குப் போவதற்குப் பதிலாக அருகாமையில் இருக்கும் தமது பிறந்த ஊராகிய ஜெயராம்பட்டிக்கு அவர் அடிக்கடி போய் விடுவார். ஆண்டுதோறும் கிட்டத்தட்ட ஆறு மாதம் நாட்டுப்புறத்திலும் ஆறுமாதம் நகரத்திலும் கழியும். கிராமத்தில் தம்பிமார்களுடன் வசிப்பது அவர் வழக்கம். அவருக்காக ஒரு சிறு வீடு கட்டிக் கொடுக்க சில அன்பர்கள் முன் வந்தபொழுது அன்னையார் அதற்கு இசையவில்லை. 'பாம்பு தனக்காக வென்று வளை தோண்டிக்கொள்வதில்லை. ஏற்கெனவே அமைந்துள்ள வளைகளில் சென்று அது வசிக்கிறது. அவ்வாறே சாது ஒருவன் தனக்கென்று இடம் வகுத்துக்கொள்வதில்லை' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் புகட்டியதை அன்னையார் அவர்கட்கு ஞாபகமூட்டினார். ஆனால் நாளடைவில் ஆச்ரமம் போன்ற ஒரு சிறு கூரைவீட்டை அவர் தமக்கென்று தேடிக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டது. தம்பிமார்கள் தங்களுக்கிடையில் அடிக்கடி சண்டையிட்டுக்கொண்டிருந்தது ஒரு காரணம். இரண்டாவதாக அன்னையாரைத் தரிசிக்க வந்த அன்பர்கள் தங்குதற்கு வசதியான இடம் ஒன்று வேண்டியிருந்

தது. அங்ஙனம் அவர் வாழ்ந்திருந்த கூரைவீடு இப்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தாருடைய சொத்தாக அக்கிராமத்தில் இருக்கிறது. அதற்குப் பக்கத்தில் அன்னையாரின் ஞாபகார்த்தமாக 'சாரதா மந்திரம்' என்ற ஒரு கோயிலும் அவரது காலத்துக்குப் பிறகு கட்டுவிக்கப்பட்டது.

கல்கத்தாவில் சில சமயங்களில் அன்னையார் குருதேவரது கிரகஸ்த சிஷ்யர்களாகிய ஸ்ரீ பலராம்போஸ், ஸ்ரீ மகேந்திரநாத குப்தர் முதலாயினோர் வீடுகளில் வசிப்பார். வேறு சில சமயங்களில் அவருக்காக வென்று தனி வீடு வாடகைக்கு அமர்த்தப்படும். இப்படிக் கொஞ்ச காலம் கழிந்தபிறகு அன்னையார்க்கென்றே கல்கத்தாவில் பாக்பஜார் எனும் பகுதியில் ஸ்ரீமத் சாரதானந்த சுவாமிகளின் முயற்சியால் சொந்த வீடு கட்டுவிக்கப்பட்டது. அது அன்னையாரின் ஆலயம் என்றும் உத்போதனப் பத்திரிகையின் காரியாலயமென்றும் இன்றைக்கும் அழைக்கப்படுகிறது. அப்படிச் சொந்த இருப்பிடம் அமைதற்கு முன்பு ஒரு தடவை அவர் வாடகை வீட்டில் இருந்தபொழுது பஞ்சதபசு எனும் கடுமையான சாதனம் ஒன்று செய்தார். நான்கு பக்கத்திலும் தீமூட்டி, சூரிய வெப்பம் தலையில் படும்படியான ஓரிடத்தில் காலையிலிருந்து மாலை வரையில் உட்கார்ந்திருந்து நிஷ்டை புரிவது அதன் கோட்பாடாகும். இப்படி ஐந்து திசைகளிலிருந்து அனல் உடலைத் தாக்குவதால் அதற்குப் பஞ்சதபசு என்று பெயர். வாலை வயதுக் குமரி ஒருத்தியின் தோற்றம் அடிக்கடி அன்னையார்க்குக் கனவிலும் நனவிலும் தென்பட்டுக் கொண்டிருந்தது. அதை நீக்குதற்கு அவர் இந்தத் தபசைத் தொடர்ந்து ஏழு நாள் செய்தார். முதல்நாள் காலையில்

நீராடி விட்டு அனலின் அருகில் சென்றபொழுது வெப்பத்தைத் தாங்குவது எங்ஙனம் என்ற அச்சம் உண்டாயிற்று. குருதேவரை நினைத்துச் சிறிது சிந்தனை செய்த பொழுது அக்கினியின் உஷ்ணம் அவருக்குச் சிறிதும் தோன்றவில்லை. பிறகு ஏழு நாள் பகலெல்லாம் அப்படி வெப்பத்தில் அமர்ந்திருந்து தியானம் பண்ணுவது அவருக்குச் சாத்தியமாயிற்று. அதனால் அவர் மேனி முழுதும் கருத்துப் போய்விட்டது. தமக்குத் தென்பட்டுக் கொண்டிருந்த பெண்ணின் தோற்றமும் அதிலிருந்து மறைந்து போவதாயிற்று.

இதற்குள் அன்னையாரின் ஆத்மீயப் பெருவாழ்வு பரிபூரண நிலையை அடைந்துவந்தது. அவருடைய மனது அந்தர் முகமாகத் திரும்பி ஆத்ம சொரூபத்திலேயே லயித்திருந்தது. இகலோகத்தில் எதனோடும் ஒப்பிடுதற்கரிய இனிமை அன்னையின் முகத்தினின்று மிளிர்ந்துகொண்டிருந்தது. குருதேவரைப் போன்று அவரும் அடிக்கடி சமாதி நிலை யெய்துவது சர்வ சாதாரணமாயிற்று. ஒருதடவை அவர் அடைந்த அனுபவத்தை இங்ஙனம் இயம்பினார்:—

“தொலையில் இருந்த தெய்வத்தன்மை வாய்ந்த உலகம் ஒன்றினுள் சென்றிருப்பதாக நான் உணர்ந்தேன். அங்கு வீற்றிருந்தவர்களது மகிமையை என்னென்பேன்! அவர்கள் அருளே வடிவெடுத்திருந்தனர். என்பால் அன்பை மிகுதியாக அவர்கள் காட்டினார்கள். குருதேவரும் ஆங்கு அமர்ந்திருந்தார். என்னை அவர் அருகில் அமரும்படிச் செய்தார்கள். நான் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லால் விளக்குவ தெப்படி? அவர்களைப்போன்று நானும் ஆங்கு அழகுடையவளாக மாறிவிட்டேன். பிறகு கீழ் நிலைக்கு என் மனம்

இறங்கியபொழுது என் உடல் ஜடம்போன்று கிடப்பதைக் கண்டேன். அருவருப்புக்கு ஏதுவான இந்த ஆக்கையினுள் குடியிருப்பது எப்படி என்று மறுதலித்தேன். நெடுநேரத்துக்குப் பிறகு மனது உடலில் நுழைந்தது; அப்பொழுது அது பிரக்ஞை பெற்றது.”

தோழிமார்களாகிய கொலாப் அம்மையும் யோகினி அம்மையும் ஒருதடவை, நிஷ்டைக்கு அமர்ந்த அன்னையார் பேச்சற்று மூச்சற்று ஸ்தம்பம்போன்று நெடுநேரம் இருந்ததைக் கண்டனர். முகவிலாசம் எழில் வீசிக் கொண்டிருந்ததைத் தவிர உயிரின் அறிகுறி எதையும் அவர்கள் காணவில்லை. மூச்சு விடவும் பேசவும் ஆரம்பித்தபொழுது “யோகினீ, என் கை எங்கே? பாதம் எங்கே?” என்று அரைகுறையான ஒலிகள் வெளிவந்தன. பாங்கிமார் பாதத்தை வருடியும் கரத்தை அமுக்கியும் “அன்னாய் இதோ உமது அவயவங்கள் உள்ளபடி இருக்கின்றன” வென்று உடலுணர்ச்சியூட்டினர். எனினும் சரீர ஞாபகம் வர நெடுநேரமாயிற்று. ஒருவேளை இது நிர்விகற்ப சமாதியா யிருந்திருக்கலாம்.

அன்னையார் பெற்ற மற்றொரு அரிய அனுபவம் குறிப்பிடத்தக்கது. பிரம்மவாரி என்று சொல்லப்படுகிற கங்காநதியினுள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சென்று லயமானதாகவும், சைதன்ய சொரூபமாகிய அத்தகைய புண்ணிய தீர்த்தத்தை ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் மொண்டெடுத்துப் பாரெங்குமுள்ள மானுடர்மீது தெளித்ததாகவும் அவர் ஞானக் காட்சியில் கண்டார். இந்த அனுபவம் அன்னையாரின் மனதை அடியோடு கவர்ந்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணரே கங்கா சொரூபமாக மாறியதைக் கண்டதனால் அந் நதியினுள் கால் வைக்க

அன்னையார் தயங்கினார். ஞானத்தாய்க்கு இக் காட்சி தென்பட்ட பின்பே ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் உலகெங்கும் தர்ம பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். உலகத்தவரைப் புனிதப்படுத்துதற்கே ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸரும் ஸ்ரீமத் சுவாமி விவேகானந்தரும் அவதரித்திருந்தனர் என்பது அன்னையார்க்கு ஞானக் காட்சியாக விளங்கிற்று.

சுடர் விளக்கு ஒன்று எரியும்போது அதன் ஒளி நாலா பக்கமும் பரவுகிறது. ஆனால் தீபத்துக்கு நேர் கீழ்ப்பாகம் இருள் சூழ்ந்து கிடக்கும். இந்த உவமானம் நம் ஞானத்தாயின் உடலோடு ஒட்டிய உறவினர்க்கு முற்றும் பொருந்தும். தம்பிமார் நால்வருள் எல்லார்க்கும் இளையவர் அபயசரணர் என்பவர் மிக அறிவாளி. கல்வியும் போதிய அளவு பெற்றவர். ஆனால் அவருடைய குமாரத்தி ராதை என்பவள் தாயின் கர்ப்பத்தில் இருந்தபொழுதே அவர் காலமாய் விட்டார். மற்ற சகோதரர் மூவரும் பேராசைக்காரர் கள். வாழ்க்கையில் வெற்றி என்பதை அவர்கள் அறிந்திலர். தங்கள் தமக்கை சாரதா தேவியார் பராமரிப்பில் பெரிதும் வளர்ந்தவர்கள். ஆனால் வயது வந்த பிறகும் தமக்கையாரின் தெய்வத் தன்மையைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது. தங்களுக்குத் தேவையாயிருந்த பொருள்களைத் தேடித் தர வேண்டுமென்று தமக்கையாரை உபத்திரவப்படுத்துவதே அவர்களின் தொழில். உடன் பிறந்தவளுடைய உதாரகுணத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் மூவர்க்கிடையிலும் ஓயாத போட்டி வந்துவிடும். அவளிடமிருந்து அகப்பட்ட பொருளைப் பங்கிட்டுக்கொள்ளுதலில் சண்டை மூண்டுவிடும். சில வேளைகளில் கை

கலக்கவும் ஆரம்பித்துவிடுவார்கள். கிராமத்தில் தங்கள் ஞானத்தாயிடமிருந்து அருளமுதைப் பெறச் சென்றிருந்த சிஷ்யர்களுக்கெதிரிலும் இத்தகைய போராட்டங்களைச் செய்ய சகோதரர்கள் ஆரம்பித்துவிடுவார்கள். அமைதியே வடிவெடுத்திருந்த அன்னையார் சாந்தமாக அவர்களுக்கு சமாதானம் சொல்லுவார்.

"நீ கையேந்தி யாரிடமும் ஒன்றும் கேட்கவேண்டிய அவசியம் ஏற்படாது. உனக்குத் தேவையாயிருக்கும் எளிய உணவும் உடையும் வலியவந்து சேரும்," என்று குருதேவர் நம் அன்னையார்க்கு உபதேசித்தருளியிருந்தார். அவரும் அக்கட்டளையின்படி பௌதிகப் பொருள் ஒன்றிலும் பற்றில்லாதவராய் முற்றும் பரத்தைச் சார்ந்து வாழ்ந்து வந்தார். நாளடைவில் போதிய அளவு பொருள் அவருக்கு வலிய வந்து சேர்ந்துகொண்டிருந்தது. தயாள குணமுடைய தாய் அவரவர் தேவைக்கேற்றபடி அவைகளைத் தம் அருட் புதல்வர்களாகிய துறவிகளுக்கும், உடலுக்கு உறவினர் ஆகிய தம்பிமார்களுக்கும் பகுத்தளிப்பார். ஆனால் குறுகிய நோக்கமுடைய உடன்பிறந்தவர்களுக்கு அதைக் குறித்துக் கோபம் மூண்டுவிடும். தங்கள் சகோதரி சம்பாதிக்கும் சொத்தெல்லாம் குடும்பத்துக்கு வந்து சேரவேண்டியதே யொழிய, சிஷ்யர் என்று சொல்லிக்கொள்ளும் வேற்றூர்க்கு அதைச் சிறிதும் விரயம் செய்யலாகாது என்று சண்டையிடுவார்கள். புன்னகை பூத்தவராய் அன்னையார் அப்புன்மொழிகளைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்வார்.

ஜெயராம்பட்டிக்குச் சென்றிருந்த பொழுதெல்லாம் தம்பிமார்களின் குடும்பங்களிலிருந்த அலங்கோலங்களைக் கண்டு சகியாதவராய் அவர்களின்

மனைவிமார்களுக்கு உதவிபுரிய அன்னையார் முற்படுவார். திக்கற்றவைகள் போல் திரிந்த கொழுந்திமார்களின் குழந்தைகளை இவர் பரிந்தெடுத்துப் பராமரிப்பார். அத்தையார் காட்டிய அன்புக்கு வசப்பட்ட சிசுக்கள் சொந்தத் தாய்மார்களைத் துறந்துவிட்டு இவரிடம் வந்து விட்டன. நாட்டுப்புறமான போதிலும் சரி, நகரமான போதிலும் சரி, அத்தையார் சென்ற விடத்துக்கே மூன்று சிறுமிகளும் ஒரு சிறுவனும் உடன் செல்லு வார்கள். அப்படி அத்தையாரால் ஆதரிக்கப்பட்ட குழந் தைகள் அமைதியுற்று வாழ்தலுக்குப் பதிலாக ஓயாது அவருக்கு உபத்திரவம் கொடுத்துக் கொண்டே யிருந் தன. போதாததற்கு அக்குழந்தைகள் அடிக்கடி பிணி யால் நைந்து வருந்திக் கொண்டிருந்தன. அப்போதைக் கப்போது ஏற்படும் பிணிகளுக்குப் பரிகாரம் பண்ணு வது அவருக்கு உண்டான மற்றொரு வேலையாகும். காலஞ் சென்ற கடைசித் தம்பியின் மனைவிக்கு ஒரு வாறு பைத்தியம் பிடித்துக் கொண்டது. ஆதலால் அவளையும் அவளுடைய குழந்தை ராதையையும் ஒரு மிக்க ஆதரிப்பது அன்னையாரின் கடமையாயிற்று. பைத் தியக்காரி எதோ சில வேளைகளில் மட்டும் அன்னையார்க்கு உபத்திரவம் கொடுப்பாள். ஆனால் ராதை செய்த தொந்தரையோ ஓயாதது. பராமரிப்புக்குக் கைம்மா றாக அன்னையார்க்கு அடியும், திட்டும், உதையும், கிள்ளும் மாறி மாறி ராதையிடத் திருந்தும் மற்ற சிறுமிக ளிடத்திருந்தும் வந்து கொண்டிருக்கும். "உங்கள் மாமா என்னை எவ்வாறு மேன்மைப் படுத்தினார்; நீங் கள் எவ்வாறு என்னைக் கீழ்மைப் படுத்துகின்றீர்கள்?" என்று சிறிதும் மனம் சலியாது அவர் இருதரச் செயல் களையும் சீர்தூக்கிக் காட்டுவார். தனது அத்தையார்

படைத்திருந்த பொறுமை பூமாதேவியின் பொறுமை யைவிடப் பெரியது என்று உலகுக்கு விளக்கிக் காட்டு தற்கே ராதை எனும் சிறுமி ஒரு பிசாசின் இயல்புடன் பிறந்து நம் அருள் அன்னையாரிடம் வந்து சேர்ந்தாள் போலும்!

ஞான வாழ்க்கையில் தீவிரமாக முன்னேற்ற மடைய விரும்புகின்றவர்கள் உலக பந்தங்களை யெல் லாம் அறவே ஒழித்து விட வேண்டுமென்பது நியமம். உற்றார் உறவினரிடத் துள்ள அபிமானம் நீங்கினு லொழிய ஆத்ம சாதனத்தில் மேல் நோக்கிப் போக முடியாது. அகங்கார மமகாரம் அடியோடு அகன்ற விடத்தே ஆத்ம ஞானம் சித்திக்கிறது. இந்த விதிக்கு விலக்கு இல்லவே யில்லை. பின்பு நமது பந்துக்க ளிடத்து அன்னையார் கொண்டிருந்த இணக்கத்தை எவ்வாறு பொருள் படுத்துவது? ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் போன்று ஸ்ரீ சாரதா தேவியாரும் ஆசைகளை அறவே அகற்றியவர் ஆவர். உலக இன் பத்தில் அவர்களுடைய எண்ணம் அணுவளவும் செல்ல வில்லை. அகங்காரத்தின் அறிகுறி அவர்களிடத்துத் தோன்றலே கிடையாது. இனி மமகாரத்தை ஆராயுங் கால் அது மன நிலையைப் பொறுத் திருக்கிறது. உடைமை ஒன்றும் இல்லாது உற்றாரிடத்திருந்து விலகி யிருக்கும் பொழுதும் அவர்கள் மீது அபிமானம் இருக் குமாயின் அது மமகாரமேயாம். அவர்களுக் கிடையில் வாழ்ந்திருக்கும் பொழுதும் சந்தைக் கடையில் போன்று பற்றற் றிருப்பவரே மேலோர். அன்னையாரின் நிலையும் அத்தகையது. அவர் செயற்கையாகத் துறவறத்தை நாடவில்லை. எங்கு எவர்க் கிடையில் பிறந்தாரோ ஆங்கு அவர்களுக் கிடையிலேயே தம் கருமத்தில்

கண்ணுடையவரா யிருந்தார் அவர். அன்னையாரின் வாழ்க்கைப்படி தம் கருமம் என்பது பிறர் துயரத்தைப் பற்றிக் கவலையற்றிருப்ப தன்று. நெறியினின்று வில காதிருந்து கொண்டு தமது முழு ஆற்றலுக்கு ஏற்ற வளவு பிறரது துயரம் துடைப்பதும் தம் கருமமாகும். அதை நம் அன்னையார் பற்றற்றுச் செய்து சாதித்தார். தம்மை அண்டியவருள் யாருக்கு எது தேவையோ அதைக் கரவாது கொடுத் தருளினார் கருணைக் கட லாகிய தாய் ஆனவர். கஷ்டத்தைப் பொருட் படுத்தாது, கைம்மாறு கருதாது கொடுத்துக் கொண்டே யிருக்கும் மேன்மையை அவரிடத்திருந்தே நாம் கற்றுக்கொள்ள வேண்டும். உலகப் பற்றுடையார் ஒருக்காலும் அவர் செய்தது போன்று நிஷ்காமிய கருமம் செய்யமுடியாது. பண்பட்ட மனமுடையார் எல்லா நிலைமைகளிலும் பெரியோர் ஆவர் என்பதற்கு அன்னையாரின் வாழ்க் கையே சான்றாகும்.



### பன்னிரண்டாம் அத்தியாயம்

## அன்னை அளித்த அருள் விருந்து

மலர் ஒன்று விரிதலும், தேன் அருந்த வண்டுகள் தாமே வருகின்றன. அவ்வாறே பெரியார் ஒருவர் பரி பூரண நிலையை அடையுங்கால் அவரிடமிருந்து அரு ளைப்பெற அன்பர்கள் எங்கிருந்தோ வந்து சேருவர். குருவின் ஸ்தானம் வகிப்பதும் சிஷ்யர்களை ஏற்றுக் கொள்வதும் வெறும் வெளிச் சடங்கல்ல. ஜீவர்கள் ஆத்மபோதம் பெறுதற்கு இடைஞ்சலாயுள்ள கருமங் களைத் தம்மீது எடுத்துக்கொண்டு, அவர்கள் மேலும்

மேலும் உயர்நிலைக்குப் போதற்கு உதவியாயிருப்பவரே ஞான குருவாகிறார். அங்ஙனம் உயிர்களுக்கு ஆத்ம போதம் கொடுத்து உய்விக்கும் பணியே உலகத்தில் ஒப் பற்றது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் உலகுக்குக் கொண்டு வந்த அருள் விருந்தைப் பெருமிதமாக எடுத்துவழங்கும் பொறுப்பு அன்னையார்க்கு ஏற்பட்டது. அதற்கென்றே ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவரை ஆயத்தப்படுத்தினார். குருதேவர் திருமேனி தரித்திருந்தபொழுதே அன்னை யார் இந்த அரும்பணியை ஆரம்பித்தார். அண்ணலாரால் ஆக்ஞாபிக்கப்பட்டு அவர் சுவாமி நிரிகுணாதீதருக்கும் சுவாமி யோகானந்தருக்கும் மந்திர தீக்ஷை செய்து வைத்தார். அருள்சுரந்து அன்னையார் ஞானச் செல் வத்தை வழங்கியவாறு போல, ஸ்ரீ ராமகிருஷ்ணராவது அவருடைய மற்ற சிஷ்யர்களாவது வழங்கியது இல்லை. அகிலாண்ட நாயகியின் ஓர் அம்சமாக அவர் அவதரித் ததே அதற்குக் காரணமாகும். தன் குழந்தைகளைப் பொல்லாதவைகளென்று தாய் தூரத் தள்ளிவைப்பது கிடையாது. கருணையே வடிவெடுத்த ஞானத்தாயால் மந்திர தீக்ஷை கொடுத்து ஆதரிக்கப்பட்டவர்கள் இந்தி யாவிலும் வெளி நாடுகளிலும் சேர்ந்து இரண்டாயிரம் பேர்களுக்கு மேல் இருக்கிறார்கள். அத்தனை பேரும் ஞான வாழ்க்கைக்குத் தகுதியுடையவர்களா யிருக்க முடியுமாவென்று சிலர் அன்னையாரை வினவிய பொழுது அவர் “ தஞ்சமென்று என்னிடம் வரும் என் குழந்தை களை நான் ஏற்றுக்கொள்ளா விட்டால் அவர்கள் வேறு யாரிடம் போவார்கள் ? உடனே அவர்கள் முன்னேற்ற மடையா விட்டாலும் காலக்கிரமத்தில் அவர்கள் மேன்மையுறுவது திண்ணம்” என்றார். தம் வாழ்நாள் முழுதிலும் சுமார் பன்னிரண்டு பேர்களுக்கு மட்டும்

அவர் மந்திர தீக்ஷை தரமுடியாதென்று அறவே மறுத்துவிட்டார். அதற்குக் காரணம் யாது என்பதை அவர்தான் அறிவார்.

தீக்ஷை செய்து வைப்பதன் தத்துவத்தைப்பற்றி அன்னையார் பகர்ந்ததாவது—"மந்திரத்தின் வாயிலாக குருவின் ஆத்மசக்தி சிஷ்யனுக்கு அளிக்கப்படுகிறது. சிஷ்யனுடைய பாபச் செயல்களில் சில, குருவை வந்து சேருகின்றன. அங்ஙனம் கருமத்தை ஏற்றுக்கொள்ளும் குரு பலவிதமான பிணிகளுக்கு உட்பட வேண்டிய தாகிறது. குருவின் ஸ்தானத்தை வகிப்பது எளிதான காரியமன்று. ஆனால் நல்ல சிஷ்யர்கள் குருவுக்குத் துணை புரிகின்றனர். சில சிஷ்யர் விரைவில் முன் னேற்ற மடைகின்றனர். அத்தகைய முன்னேற்றம் மன பரிபாகத்தைப் பொறுத்திருக்கிறது." சிஷ்யர் களுடைய வினையை ஏற்றுக்கொள்வதால் தாம் கஷ்டப் படவேண்டி வரும் என்பதையும் பொருட்படுத்தாது கருணையே வடிவெடுத்த தாய் வேண்டுவார்க்கெல்லாம் ஞான வாழ்க்கையை வருத்தளித்தார். ஸ்ரீ ராம கிருஷ்ணருடைய மற்ற சிஷ்யர்களுக்கும் அன்னை ஸ்ரீ சாரதா தேவியாருக்கும் இடையே உள்ள வித்தியா சத்தை ஸ்ரீமத் பிரேமானந்த சுவாமிகள் இங்ஙனம் பகர்ந்தார்—"நாம் அருந்த முடியாத விஷங்களையெல் லாம் அன்னையாரிடம் அனுப்பிவைக்கிறோம். அவர் எல்லாருக்கும் அபயம் கொடுத்து அவர்களுடைய தீவினைப் பயனைத் தாமே ஏற்று, உண்டு, செமிக்கிறார்." பாபச் செயலுடையவர் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பாதத்தைத் தொட்டு வணங்கினால் தேள் கொட்டுவது போன்று அவருக்கு அதனால் வேதனை யுண்டாகும். அதே இயல்பு அன்னையாரிடத்தும் இருந்தது. கெட்ட

வர்கள் பாதத்தைத் தொட்டு வணங்கும் நெருக்கடி நேரிடும்பொழுது அவர் அதை அமைதியுடன் பொறுத்துக்கொள்வார். பின்பு கங்காஜலம் வார்த்துப் பாதத்தைப் புனிதப்படுத்தினால், அதனால் விளைந்த வலி கொஞ்சம் குறையும்.

மந்திரோபதேசம் செய்வதில் அன்னையார் குறிப்பிட்ட ஒரு சமயத்தை அல்லது சம்பிரதாயத்தைப் பின்பற்றவில்லை. எல்லா சமயங்களையும் தழுவியே அவர் தீக்ஷை கொடுத்துவந்தார். சைவம், வைஷ்ணவம், சாக்தம் முதலிய சமயங்களில் யார் எந்த சமயத்தைத் தழுவியுள்ளவர் என்று கவனிப்பார். பிறகு தமது வழக்கப்படி குருதேவருக்குப் பூஜை செய்து ஆராதித்துவிட்டு, தீக்ஷை பெறுதற்குரிய சிஷ்யனைக் குறித்துத் தியானம் செய்வார். அப்பொழுது சிஷ்யனுடைய மன அமைப்புக்கு ஏற்ற மந்திரம் அவரது மனதில் தோன்றும். சிஷ்யனுடைய மனம் பரிபாகம் அடைந்திருந்தால் அவனுக்கேற்ற மந்திரத்தை அன்னையார் கணப்பொழுதில் கண்டறிந்துவிடுவார். மனதின்கண் மாசு படிந்திருப்பவர்களுக்கேற்ற மந்திரத்தைக் கண்டுபிடிக்க அவருக்குக் கொஞ்சம் நேரம் பிடிக்கும். பெரும்பாலும் சிஷ்யன் தழுவிவந்த சமயத்துக்கு ஏற்ற மந்திரமே அவனுக்கு வந்து வாய்க்கும். அவன் ஏற்கெனவே ஜபித்து வந்த மந்திரம் அவனுக்கு ஏற்றதென்று, அல்லது ஏலாததென்று அன்னையாரால் ஊர்ச்சிதப்படுத்தப்படும். சில வேளைகளில் சிஷ்யனது விருப்பத்துக்கு முரண்பட்ட மந்திரத்தை ஞானத்தாய் கொடுத்தருள்வார். அப்படி முரண்பாடு ஏற்படுங்கால், "இதுதான் உனக்குத் தகுந்ததென்று எனக்குத் தோன்றுகிறது" என்று அன்னையார் எளிதாக இயம்புவார். பிறகு சிஷ்யனும் அதிவிரைவில்

அதே கொள்கைக்கு வந்துவிடுவான். ஞானக்கண் உடையவர்களுக்கே சிஷ்யனுடைய மன அமைப்பு முழுதும் தோன்றும் என்பதற்கு அன்னையாரின் அருள் விருந்தே சான்றாகும். மந்திரோபதேசத்தைப்பற்றி ஒன்றும் அறியாத பார்சிகர், ஐரோப்பியர், அமெரிக்கர் முதலாயினோர் அன்னையாரிடம் தீக்ஷை பெறும் பாக்கியத்தை அடைந்தனர். அதுமுதல் தங்கள் வாழ்க்கையே புதியதாக மாறியமைந்ததென்று அவர்கள் இயம்புவாராயினர். அநேகருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரையே வழிபடு தெய்வமாக அன்னையார் காட்டிக்கொடுத்தருளினார். அதனால் அவர்களுடைய ஆத்மீய வாழ்க்கை அதிவிரைவில் மேம்பாடடைந்தது.

அக்காலத்தில் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த மாணாக்கர் ஒருவர் மந்திர தீக்ஷை பெற்றுக்கொள்ளுதற்காக அன்னையாரிடம் சென்றார். ஞானத்தாயும் அவருடைய விருப்பத்தை முறைப்படிப் பூர்த்திபண்ணி வைத்தார். தீக்ஷைக்குப் பிறகு அவரவர் சக்திக்கு ஏற்றவாறு ஏதாவது குரு தக்ஷிணை படைப்பது வழக்கம். இந்த இளைஞர் புஷ்பம், பழம், ஒரு ரூபாய் ஆகிய இவைகளை தக்ஷிணையாக அன்னையாரின் முன் வைத்து வணங்கினார். ஆனால் அன்னையாரோ மலரையும் கனியையும் ஏற்றுக்கொண்டு, "நான் துறவிகளிடமிருந்து பணம் ஏற்பதில்லை" யென்று ரூபாயை அப்படியே வைத்துவிட்டார். தாம் துறவியல்லவென்றும், கல்லூரி மாணாக்கனென்றும் இளைஞர் அன்னையார்க்கு ஞாபகமூட்டினார். சற்றுச் சிந்தித்து விட்டு, "நான் துறவிகளிடமிருந்து பணம் ஏற்பதில்லை" யென்று அதே பதிலை மீண்டுமொரு முறை சொன்னார். தாம் கல்லூரி மாணாக்கனென்று சிஷ்யர் இன்னொரு தடவை எடுத்துச்சொன்னார். ஆனால்

மூன்றாந் தடவை அன்னையாரிடமிருந்து பழைய விடையே வந்தது. அப்பொழுது சிஷ்யருக்குத் தாம் சந்நியாசியாக வேண்டுமென்ற எண்ணம் சிறிதளவும் இல்லை. ஆனால் பிற்காலத்தில் அவருடைய மனது அறவே மாறிவிட்டது. இப்பொழுது அவர் ஸ்ரீ ராம கிருஷ்ண மடத்தில் உள்ள சந்நியாசிகளுள் ஒருவரா யிருக்கிறார். அந்த சிஷ்யருடைய பிற்கால வாழ்க் கையை முற்கூறியே அன்னையார் அறிந்துகொண் டார் போலும்.

இப்பொழுது (1939-ம் வருஷம்) ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் முக்கியமான ஸ்தானம் வகித்து வரும் சந் நியாசி ஒருவர் அன்னையாரிடமிருந்து தீக்ஷை பெற்றவர். ஆனால் அன்னையார் உபதேசித்தருளிய மந்திரம், அவர் முன்பு உச்சரித்துக்கொண்டிருந்த மந்திரத்தோடு முரண்பட்டதென்று அவர் அன்னையாரிடம் விண்ணப்பித் தார். "இல்லை இதுதான் உனக்குத் தகுந்தது" என்று அன்னையார் பதில் விடுத்தார். அதைக்கேட்டதும் சிஷ்யர் மனத்தினின்று ஒரு திரை நீங்கியது போன்று தென்பட்டது. புதிய ஆத்மீய வாழ்க்கை அவருக்கு ஆரம்பித்தது. முன்னாளில் தாம் செய்திருந்த சாதனை வகைகளையும் அது ஞாபகமூட்டி முன்னணிக் குக்கொண்டு வந்தது. ஞானகுரு ஒருவர் சிஷ்யனுடைய ஆத்மீய வாழ்க்கைக்கு எத்தகைய அருந்துணை புரிய முடியும் என்பதையும் அவர் அப்பொழுது யூகித்துக் கொண்டார். இதே சிஷ்யரது வாழ்க்கையில் உண்டான மற்றொரு நிகழ்ச்சியும் குறிப்பிடத் தக்கது. ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் தேகவியோகமானதை முன்னிட்டு அவருக்குப் பெரும் விரக்தி வந்தது. ஏகாந்தமான ஓரிடத்தில் அமர்ந்து மௌன விரதம்,

பூண்டு, அல்லும் பகலும் நிஷ்டை புரிந்து வந்தார். இப்படித் திங்கள் பதினெட்டுக் கழிந்தன. இதற்குள் அவருடைய மனது மழுங்கிப்போய்விட்டது. சிந்திக்க இயலாது ஜடம்போன்று அவர் ஆய்விட்டார். இதற்குப் பரிகாரமாக நிஷ்டையை நிறுத்திவிட்டுச் சாஸ்திரம் படித்தார். ஆயினும் மனது வழிக்கு வரவில்லை. கல்கத்தா மடத்துக்குச் சென்று சிகிச்சைகளைக் கையாண்டு பார்த்தார். எனினும் பழைய உணர்ச்சியற்ற நிலையிலேயே மனது இருந்தது. கடைசியாக அப்பொழுது ஜெயராம்பட்டியில் வசித்திருந்த அன்னையாரிடம் போய்த் தமது குறையைத் தெரிவித்தார். சிஷ்யர் ஏகாந்தத்தில் செய்த சாதனம் முறையற்றதென்று சொல்லி, வேறு எளிய முறை யொன்றை அவர் எடுத்துக்காட்டினார். அதனால் அவருடைய மனது அதிவிரைவில் கூர்மையடைந்தது. தேகத்தின் நரம்புத்தளர்ச்சி நீங்கித் திறமை யுண்டாயிற்று. சாதனத்தில் பிரவேசித்தவர்களுக்கு ஞானவாழ்க்கையை உள்ளங்கை நெல்லிக்கனி போன்று காட்டவல்ல ஆற்றல் அன்னையாரிடமிருந்தது என்பது இதுபோன்ற பல சம்பவங்களி லிருந்து விளங்குகின்றது.

மந்திரோபதேசம் பெற்றுக்கொள்ளுதற்கு அன்னையாரிடம் நேரில் செல்ல இயலாதவர்களும், நேரில் சென்றால் அவர் கருணை கூர்ந்து தங்களைச் சிஷ்யர்களாக அங்கீகரித்துக் கொள்வாரா என்று சந்தேகித்துக் கொண்டிருந்தவர்களும் பலர் அவரிடமிருந்து சொப்பன தீக்ஷை பெற்றார்கள். அத்தகைய சம்பவங்களைத் தாங்கள் கண்டது வெறும் கனவோவென்று ஆராய்ந்து பார்ப்பதற்கு அவர்கள் அன்னையாரிடம் சென்றனர். ஆங்கு அவர்கள் கண்ட அதிசயம் யாது? "சொப்பனத்தில்

உங்களுக்கு தீக்ஷை ஆய்விட்டதே," என்று அவர் சொல்லியது மல்லாது, யாருக்குக் கனவில் எந்த மந்திரத்தை உபதேசித்தாரோ அதே மந்திரத்தை மறுபடியும் ஒரு தடவை மனதில் பதியும் பொருட்டு நேரிலும் சொன்னார். சொப்பனத்தில் தீக்ஷை பெறுவது சாத்தியம் என்று யோக சாஸ்திரம் சொல்லுவதை அன்னையார் பல தடவைகளில் நிரூபித்துக் காட்டியிருக்கிறார்.

ஒரு சம்பவத்தை ஈண்டு உதாரணமாக எடுத்துச் சொல்லுவோம். துன்மார்க்கத்தில் மூழ்கியவரும், பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணரால் தடுத்து ஆட்கொள்ளப் பட்டவரும் ஆவர் கிரீச சந்திர கோஷர் என்பவர். அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணரைச் சரணமடைந்த பிறகும் ஸ்ரீ சாரதா தேவியாரைப் பற்றி விசேஷமாக ஒன்றும் தெரியாதிருந்தார். நெடுநாளைக்குப் பிறகு அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சந்நியாசி சிஷ்யர் ஒருவருடன் தாயைத் தரிசிக்க ஜெயராம்பட்டிக்குச் சென்றார். பாதத்தில் விழுந்து வணங்கியபின் அன்னையாரின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். உடல் சிலிர்க்கும் ஞாபகம் ஒன்று மனதுக்கு வந்தது. உடனே வெளியே சென்று கன்னத்தில் கை வைத்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தார். உடன் வந்த குரு சகோதரர் கிரீசர் அவ்வாறு நடந்து கொண்டதற்குக் காரணம் யாது என்று அவரைப் பின் தொடர்ந்து போய்க் கேட்டார். "எனக்குப் பத்தொன்பதாவது வயதில் நான் சாகப்போம் தறுவாயில் இருந்த பொழுது, சொப்பனத்தில் தோன்றி மருந்தூட்டி என்னை உய்வித்தது இந்த அம்மையார் அல்லவா? சென்று கேளுங்கள்" என்றார் அவர். கிரீச சந்திர கோஷருடைய ஐயம் அன்னையாரிடம் சமர்ப்பிக்கப்பட்டது. அவரும் அது முற்றிலும் உண்மையென்று ஒத்

துக் கொண்டார். பிறகு கிரீஸர் இங்ஙனம் இயம்பினர்—
“அப்பொழுது தீராத நோய் ஒன்று என்னை வாட்டிக் கொண்டிருந்தது. மருத்துவர்களெல்லாரும் கைவிட்டு விட்டனர். சொப்பனத்தில் தேஜோ மயமான ஆகாயத்தினின்று, தேவதை போன்ற பெண் ஒருத்தி என் முன் தோன்றினள். எனக்கு அப்பொழுது ஈசுவர விசுவாசம் கிடையாது. ‘மகனே, நீ வருந்துகின்றாய் அல்லவா? இதைச் சாப்பிடு’ என்று சொல்லி அவள் என் வாயில் ஏதோ ஒன்றைப் போட்டு விட்டு மறைந்தாள். நாவுக்கினிய அதை நான் அருந்தினேன். அதினின்று நானும் குணமடைந்தேன். அதே மங்கைதான் இந்த அம்மை என்பதை நான் இப்பொழுது கண்டு கொண்டேன்.” மேலும் தமது ‘அன்னை’ யைத் தமக்குக் காட்டிக் கொடுத்தவர் தம்மை ஆங்கு அழைத்துச் சென்ற சந்நியாசி என்று அவரையும் கிரீஸர் மிக மெச்சினர்.

ஆனால் இத்தகைய அதிசயச் செயல்களில் கருத்து வைக்கலாகாது என்று அன்னையார் அடிக்கடி சொல்லுவார். ஞான வாழ்க்கைக்கு அதிசயச் செயல்கள் இன்றியமையாதவைகள் ஆகா. சில வேளைகளில் அவைகள் இடைஞ்சலாகவே வந்து வாய்க்கின்றன. புனித வாழ்க்கை, பக்தி, வைராக்கியம், ஞானம் ஆகியவைகளிலேயே கருத்து வைக்க வேண்டுமென்று அவர் சொல்லுவார். எண்ணிறந்த சிஷ்யர்களை அவர் தம்மிடத்து வந்தடையும்படிச் செய்தது ஆடம்பரத்தையும் அதிசயச் செயல்களையும் கொண்டல்ல. வெளித் தோற்றத்தில் அமைதியுடைய கிராமத்துக் கிழவி யொருத்திக்கும் அன்னையார்க்கும் வித்தியாசம் ஒன்றும் காணப் படாது. பெண்டிர்கள் கூட்டத்தில் அவரைப் பிரித்து அறிவது

யாருக்கும் இயலாது. ஆனால் பேச ஆரம்பித்தால் ஞானம் இனிது பெருக்கெடுக்கும்; அதற்கு மேல் அன்பு செயலாக வடிவெடுக்கும். அன்னையாரின் பேரன்பு அலையே அத்தனை பேரை அவரிடம் கொண்டு சேர்த்தது. பெற்ற தாயின் அன்பைப் பெரும்பாலர் அனுபவித்திருக்கின்றனர். ஆனால் நம் ஞானத்தாயின் பேரன்புக்கு உலகில் எதுவும் ஈடாகாது. முந்தையது அஞ்ஞானத்தில் பிறந்தது; பிந்தியது ஞானத்தில் பிறந்தது.

கீழ் வங்காளத்தில் வசித்து வந்த வாலிபன் ஒருவன் அன்னையாரின் மகிமையைப் பற்றி அநேக நாட்களாகக் கேள்விப் பட்டிருந்தான். அவருடைய அனுக்கிரகத்தைப் பெற்றுத் தானும் கிருதார்த்தனாக வேண்டுமென்று கருதிய இளைஞனுக்குத் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள நெடுநாளாக இயலவில்லை. வசதி வாய்த்ததும் அவன் கல்கத்தாவுக்குப் புறப்பட்டு ஓடி வந்து சேர்ந்தான். ஆனால் அப்பொழுது அன்னையார் கிராமத்தில் வாழ்ந்திருந்தார் என்று கேட்டு, அவன் பெரிதும் ஏமாற்ற மடைந்தான். ஆயினும் அவன் ஊக்கத்தைக் கைவிட வில்லை. காரியம் கைகூடாது கீழ் வங்காளத்துக்குத் திரும்புவது சரியல்ல வென்று நினைத்தான். நெடுவழிக்குத் துணையோ யாருமில்லை. அக்காலத்தில் ஜெயராம்பட்டிக்குப் பயணம் போவது எளிதன்று. வழியைப் பற்றிய விவரங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு அன்னையே துணை யென்று துணிந்து அவன் புறப்பட்டான். இரண்டாம் நாள் அதிகாலையி லிருந்து இருட்டிப் போம் பரியந்தம் ஓட்டமும் பெருநடையு மாகப் பயணம் போனான். வழியில் தக்க உணவு கிடைக்க வில்லை.

களைப்பால் கண் சுழல்கிறது. ஜெயராம்பட்டி பக்கத்தில் இருக்கிறது எனும் உறுதி அவனுக்குண்டு. ஆனல் நான்கு திசையிலும் ஒரே காரிருள். மயங்கி ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டான். எத்திசையில் போவதென்று அவனுக்கு விளங்கவில்லை. சுமார் ஒன்பது மணிக்கு வழிப்போக்கர் இருவர் விளக்கை எடுத்துக் கொண்டு அவ்வழியே வந்தனர். அவர்கள் ஜெயராம்பட்டி வழியே போகின்றவர்கள் என்றறிந்து இளைஞன் அவர்களைப் பின் தொடர்ந்தான். சுமார் பத்து மணிக்கு ஊருக்குள் அவனுக்கு வழி காட்டி விட்டு அவர்கள் தம் போக்கில் போயினர்.

தமது மகன் ஒருவன் தவித்துக் கொண்டு வருகிருன் என்று அன்னையார்க்கு முன்னமேயே மனதில் பட்டது. அவனுக்காக நல்லுணவு சமைத்து வைத்தார்; ஓர் அண்டா நிறைய வெந்நீர் ஆயத்தப் படுத்தினர். மகனை இன்னும் காணேமே யென்று ஆவலுற்றுக் கையில் விளக்கை எடுத்துக் கொண்டு அன்னையார் தாமே வீதியில் வந்து நின்றார். தடுமாறி வந்து சேர்ந்த இளைஞன் அவரை இன்னரென்று தெரிந்து கொள்ளாது "அன்னையாரின் வீடு எங்கே?" என்று அவரையே கேட்டான். "வா மகனே," என்று அவர் வழி யழைத்துச் சென்றார். வாலிபனுக்கு இன்னும் விஷயம் விளங்க வில்லை. வீட்டுக்கு வந்ததும் "வெந்நீர் ஆயத்தமா யிருக்கிறது, ஸ்னனம் செய்" என்றார் வழி யழைத்து வந்தவர்.

"நான் முதலில் அன்னையாரைக் கண்டு தரிசிக்க வேண்டும்" என்றான் யுவன்.

"நான்தான் உன் அன்னை" என்று வழி யழைத்து வந்த அதே அம்மையிட மிருந்து பதில் வந்தது.

இளைஞன் அடியற்ற மரம் போன்று வீழ்ந்து திருவடிகளில் வணங்கினான். "அன்புக் கடல் என்னை எதிர்கொண் டழைத்தும் நான் தெரிந்து கொள்ள வில்லையே" என்று ஏங்கினான்.

"குழந்தாய், நீ நலிவுற நடந்ததினால் உன் காலில் ரத்தம் கட்டிக் கிடக்கும். இந்தக் கல்லின் மீது உட் கார்ந்து கொள். நான் வெந்நீர் வார்க்கிறேன். நீ காலைத் தேய்த்துக் கொடு" என்றார் அன்னையார்.

"தமது திருக்கரம் தீண்டப் பெற்ற தீர்த்தம் என் காலில் படுவது முறையன்று" என்று யுவன் அதற்குத் தடை சொன்னான்.

"உன்னைப் பெற்ற தாய் உன்னை நீராட்டிய துண்டா" என்று அன்னையார் கேட்டார்.

"ஆம், பல தடவைகளில் அவர் என்னை நீராட்டி யிருக்கிறார்" என்று பதில் வந்தது.

"அப்படியானால் என்னைத் தாயாக நீ அங்கீகரித்துக் கொள்ளமாட்டாயா?" என்று அன்னையார் நயந்து கேட் டார். இடிவிழுந்தாற்போலிருந்தது இளைஞனுக்கு இக்கேள்வி. அவனுடைய பயபக்தி பேரன்பில் மறைந் தது. அன்னை அவனுடைய உடல்வலியை நீக்கியது போன்று, பிறவிப் பிணியை நீக்குதற்கான மந்திர தீக்ஷையையும் பிறகு செய்து வைத்தார். இளைஞனும் கிருதார்த்தனானான்.

நிறையினின்றும் நழுவிய யுவதி ஒருத்தி அன்னை யாரின் அருகில் வந்து நின்றுகொண்டு தேம்பித் தேம்பி அழுதாள். வாய்விட்டு வேறு ஒன்றும் பேச அவளுக்கு இயலவில்லை. அவளது குறையைக் குறிப்பாலறிந்த அன்னையார், "என் கண்ணே நீ கவலைப்படாதே. சென் றதை மறந்துவிடு. இன்று முதல் உனக்குப் புதிய

புனித வாழ்வு ஆரம்பிக்கிறது," என்று சொல்லி அவளைக் கட்டித் தழுவினர். அன்னையின் திருமேனி தீண்டப்பெற்றது முதல் அப்பெண்ணின் வாழ்க்கை பவித்திரமே வடிவெடுத்தாற்போன்று மாறிவிட்டது. இது போன்று இன்னும் சில ஆடவர் மகளிர் ஆகிய இருபாலாரையும் அன்னையார் தடுத்தாட்கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ண மடத்துத் துறவிச் சிஷ்யர் பலருக்கு அன்னையார் பிரம்மசரிய தீக்ஷைகளும் சந்நியாசமும் செய்துவைத்தார். அவைகளுக்கு ஏற்ற மந்திரங்களை உபதேசித்து, விரதத்தை எவ்வாறு அனுஷ்டிப்பது என்பதை மட்டும் அவர் காட்டிக்கொடுத்தார். அவ்விரு ஆச்ரம சம்பந்தமான மற்ற வைதிகச் சடங்குகளையெல்லாம் மடத்துத் தலைவராகிய ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் பொறுப்பில் அவர் விட்டுவிட்டார். சில யுவர்களுக்கும் யுவதிகளுக்கும் விவாகம் செய்து கொள்ள வேண்டாமென்றும், தூய பிரம்மசரிய வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும் அன்னையார் போதித்தார். விவாகத்தை விலக்க முயன்ற வேறு சிலர்க்கு அதன் அவசியத்தை அவர் எடுத்தோதினர். ஆக அவரவருக்குப் பொருந்திய வாழ்க்கை முறையில் மேல் நோக்கிச் செல்லும்படி அவர் உற்சாகப்படுத்தினர். தங்களுக்கு உண்டாகும் கணக்கற்ற துயரங்களைக் குடும்பஸ்தர் அன்னையாரிடம் வந்து முறையிடுவார்கள். துன்பம் கலவாத வாழ்க்கை இவ்வுலகில் இல்லையென்றும், அவைகளைப் பொறுமையுடன் சகித்துக்கொள்ள வேண்டுமென்றும் அன்னையார் அவர்களுக்கு ஆறுதல் சொல்லுவார். இங்ஙனம் துறவிகளுக்கும் இல்லறத்தாருக்கும் அன்னையின் வாழ்க்கை நடுநாயகமாக இலங்கிற்று.

கிராமத்துக்குத் தம்மை நாடி வந்த சிஷ்ய கோடிகளுக்குக் குற்றேவல் புரிவதில் அன்னையார் அடைந்த ஆனந்தம் அளவிடமுடியாதது. நெடும் பயணம் நடந்து வந்தவர்கள் காலையில் நேரத்தில் எழுந்திராது வேண்டியவாறு உறங்கி ஓய்வு பெறுதற்கான வசதிகளை அவர் செய்து வைப்பார். அவர்களுக்குச் சிற்றுண்டி அளிப்பதற்காகத் தாமே அதிகாலையில் வீடு வீடாய்ப் போய்ப் பால் சேகரிப்பார். அவர்களுக்கு ஏற்ற உணவைத் தம் கைப்படச் சமைத்துப் பரிமாறினாலொழிய அன்னையார்க்குத் திருப்தி யுண்டாகாது. நமது அருட் செல்வர்களும் செல்வியர்களும் தம்மிடமிருந்து விடை பெறும்போது, பெற்றதாயினும் சாலப்பரிந்து பிரிவாற்றாமையால் வருந்துவார். சிறிது தூரம் உடன் சென்று வழியனுப்பி, சிஷ்யர்கள் மறைந்துபோம் பரியந்தம் ஆவலுடன் அவர்களை உற்று நோக்கிய வண்ணமாய் நிற்பார். தங்களை ஈன்றெடுத்த தாய்மார்களிடமிருந்தும் அத்தகைய அன்பைப் பெற்றதில்லையென்று அவரோடு உறவாடும் பாக்கியம் வாய்க்கப் பெற்றவர் பகர்கின்றனர். பெற்ற தருணத்தில் செய்கிற பணிவிடை முதல் பிறவிப் பிணியை நீக்குதற்கு ஏற்ற ஞானப்பால் ஈறாக அனைத்தையும் அன்னையார் அருள் சுரந்து உலகுக்கு அளித்து வருவாராயினர்.



பதின்மூன்றும் அத்தியாயம்

# அன்னையின் அருள் நிலை

வெளிப் பார்வைக்கு மற்ற மங்கையர்களைப்போன்று அன்னை ஸ்ரீ சாரதா தேவியும் தென்பட்டார் எனினும், அவரிடத்துத் தனித் தெய்வத் தன்மையொன்று திகழ்ந்து கொண்டிருந்தது. அமைதியும் பெருந்தன்மையும் மாட்சிமையும் ஒன்று சேர்ந்து அவர் படைத்திருந்த தாய்மையை நன்கு விளக்கிக்காட்டின. அச்சமின்றி யாரும் அவர் அருகில் செல்ல முடியுமெனினும், அடக்கமும் பயபக்தியும் இயல்பாகவே அவர் முன்னிலையில் வந்துவிடும். பெற்ற தாயுடன் உறவாடுவதை விடத் தாராளமாய் அவருடன் உறவாடலாம். அத்தகைய சுதந்திரத்துக் கிடையில் ஒரு தெய்வ சந்நிதியில் இருக்கிறோம் என்ற எண்ணமும் சேர்ந்தே உண்டாகும். ஒரு தேவதையின் மகிமையை மானுட யாக்கையைக் கொண்டு எவ்வளவுதான் மூடினாலும் அது மறைபடாதிருப்பது போன்றிருக்கும் அன்னையின் தோற்றம். இன்னும் அவர் நிஷ்டையில் அமர்ந்திருக்கும் பொழுது, ஒளி வீசுவது போன்று அவர் திருமேனி தென்படும். இளமையில் அவருடைய ஆக்கை தெய்வீக எழில் மிக உடையதாயிருந்தது. முதுமையிலோ அது மங்கி மாநிறமாய் விட்டது. ஆயினும் எக்காலத்திலும் அவருடைய முகம் ஓர் இளங்குமரியின் முகம்போன்று இனிமையும் மென்மையும் பெற்று மிளிரும். அவருடைய முக விலாசத்தைக் காண்பவர் தம் தாயின் முகம் காண்பவர் போன்று பேரானந்தம் எய்துவர். அன்பே வடிவெடுத்து

மிளிர்வது ஒரு கூறு; அசைவற்றுக் கற்பாறைபோன்று ஆத்ம சொரூபத்தில் நிலைத்திருப்பது அவருடைய மற்றொரு கூறாகும். கேள்விகள் பல கேட்டுத் தங்கள் ஐயங்களை அகற்றிக்கொள்ள வேண்டுமென்ற கருத்துடன் அநேகர் அன்னையாரிடம் செல்லுவார்கள். ஆனால் அவரைக் கண்டதும் ஐயங்கள் தாமே அகன்றுவிடும். அவரிடத்திருந்து பரவும் அருளானது சாந்தத்தையும் மேலான மன நிலையையும் எல்லார்க்கும் வழங்கா நிற்கும்.

மிகைபடப் பேசுதல் அன்னையாரிடம் கிடையாது. அடங்கிய, அமிழ்து போன்ற இனிய குரலில் சில சொற்களே வெளிவரும்; அவை யாண்டும் உயிரும் அருளும் பொருளும் நிறைந்த சொற்களாகும். அன்பும் அனுதாபமும் ஊறிய அவருடைய இன்மொழியானது நெடுநாள் புண்பட்டிருந்த மனதைக் கணப்பொழுதில் பண்படுத்திவிடும். தடுமாற்றமுடையோர் அன்னையாரின் சந்நிதியில் திட்பம் பெறுவர்; மன வுறுதியிலார்க்கு உறுதியும் ஊக்கமும் வரும்; சோர்வுடையார் சுறுசுறுப் படைவர்; துயரமுடையார் தெளிவுற்று இன்பம் துய்ப்பர். மாந்தரது மருளை நீக்கி அருளை வழங்க வல்லவைகளாயிருந்தன, அன்னையாரின் நிறைமொழியும் அவரது மாண்புடைய முன்னிலையும். அவரிடத்திருந்து ஓயாது கருணை பொழிந்து கொண்டிருந்ததே இதற்கெல்லாம் மூலகாரணமாயிற்று. அவர் மன்னிக்க முடியாத குற்றமொன்றும் உலகில் இல்லை. நொந்துவந்து ஒருவன் தான் செய்த பிழையை வெளியிடுதற்கு முன்பே அன்னையின் அருள், ஆறுதல் மொழியாக வடிவெடுத்து வந்து, அவனது துன்பத்தைத் துடைத்துவிடும். முறை தவறி நடந்து கொண்டதற்கு சிட்சையாக சிஷ்யன் ஒருவனை அன்னையாரின்

முன்னிலையில் போகலாகாதென்று சிலர் தடுத்து விட்டனர். இதைக்கேட்ட தாய் "என் குழந்தை சேற்றில் விழுந்துவிட்டால் அவனை எடுத்துக் குளிப்பாட்டித் தூயவனாக்கி என் மடியில் அமர்த்துவது என் கடமை. அவனை என்னிடம் விட்டு விடுங்கள்" என்று கருணை கூர்ந்து கூறினார். தண்டனையைவிட அன்னையின் அன்பே அவனை அதி விரைவில் சீர்திருத்தியது.

குற்றம் கண்டுபிடிக்கும் சுபாவம் தமது சித்தத்தை விட்டு அடியோடு போய்விட வேண்டுமென்று அவர் பிருந்தாவனத்தில் பிரார்த்தனை பண்ணினார் என்பது முன்னமே சொல்லப்பட்டது. இறைவனது திருவருளும் அங்ஙனமே அவர்மீது சுரந்ததென்று சொல்ல வேண்டும். ஏனென்றால் அவர் வீதியில் செல்லும் போது மாந்தர் செய்யும் குற்றங்கள் கண்ணெதிரே தோன்றினும், ஒன்றும் அறியாத பச்சைக் குழந்தையின் பாங்கையுடைய அவர் அவைகளைக் குற்றமெனக் கருத்தில் வாங்கிக்கொள்ள மாட்டார். கொலாப் அம்மை ஒரு தடவை ஒரு வேலைக்காரியைக் கடிந்து திட்டிக் கொண்டிருந்தாள். அதற்குக் காரணம் யாதோவென்று அன்னையார் வினவ, "தாயே, அதைத் தங்களிடம் சொல்லுவதால் பயன் யாதுளது? தங்களுக்குத் தான் சொல்லிக் காட்டினாலும் பிறர் தீமை கண்ணில் படுவதில்லையே" என்று வைவது போல் அவள் விடையிறுத்தாள். "கொலாப், குற்றம் கண்டு பிடிக்கும் கூட்டத்துக்கு இக்குவலயத்தில் குறைவில்லை. நான் ஒருத்தி வேறு போக்கில் போவதால் யாருக்கும் குறை யேற்படாது" என்று அமைதியுடன் அன்னையார் அவளுக்கு அறிவித்தார். உண்மையில் அன்னையாரின் போக்கு ஒன்றே உலகுக்கு நிறை செல்வமாகுமென்று நாம்

நினைக்கவேண்டும். தீமையைக் கொண்டு தீமையைப் போக்கமுடியாது. நன்மை யொன்றே தீமையை அகற்றுதற்கு உற்ற உபாயம்.

துயரத்தில் தவித்தவர் யாராவது அன்னையாரிடம் சென்று வெறுங் கையோடு திரும்பியது கிடையாது. அவரவர் தேவைக்கு ஏற்றபடி உணவோ, உடையோ, பணமோ கொஞ்சம் பெற்றுக்கொண்டு போவார்கள். அப்பொருளுதவிகளுக்கெல்லாம் மேலாக அன்னையார் அளித்த அன்பும் அனுதாபமும் அவர்களுடைய துய ரத்தை உடனே ஆற்றின. கிராமத்தில் கவனிப்பாரின்றி அனாதைகளாகக் கிடந்த கிழவிமார்களும் பிணியால் வருந்திக் கிடந்த மற்றவர்களும் அன்னையாரின் ஒப்பற்ற ஆதரவைப் பெற்று வந்தனர். கண்ணுக்குத் தென்படும் பொழுது அவர்களுக்கு ஏதோ கொஞ்சம் உதவி புரிவது என்பதில்லாது, என்னென்ன விதங்களில் அவர்களுடைய துயரத்தைத் துடைக்க முடியுமோ அவ்வவ் விதங்களி லெல்லாம் அவர்களுக்கு அன்பு சுரந்து அன்னையார் அரும்பணி செய்வார். வெள்ளம், பஞ்சம், கொள்ளைநோய் முதலியவைகளால் மக்களுக் குக் கஷ்டம் மேற்படும்போது அவைகளின் நிவாரண வேலையில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் ஈடுபடும். தமது அருட் செல்வர்கள் அத்தகைய பரநலச் சேவையில் பிரவேசித்தது அன்னையார்க்கு அளவிலா மகிழ்வை உண்டு பண்ணிற்று. நிவாரண வேலையினின்று அவர்கள் திரும்பி வந்ததும், விரிவான செய்திகளை அன்னையார் ஊக்கத்துடன் கேட்பார். அப்படித் திருத்தொண் டாற்றி வந்த சிஷ்யர்களைப் பார்த்து "அருமைச் செல் வர்காள், பரநலத்தின் பொருட்டே நீங்கள் குருதேவ ரிடம் வந்து சேர்ந்திருக்கிறீர்கள். இதற்கு ஒப்பான

பேறு இவ் வுலகில் வேறு ஒன்றும் கிடையாது" என்று மனமார ஆசீர்வதிப்பார்.

அன்னையார் வைதிக பிராமணக் குடியில் பிறந்தவர் எனினும், குலாசாரங்களை யெல்லாம் அவருடைய பேரன்பு தூர ஒதுக்கி வைத்துவிட்டது. சீர்திருத்தக் காரர்கள் செயற்கையாகவும் பலவந்தமாகவும் செய்கின்ற சில சமுதாயத் திருத்தங்களை அவர் அன்பின் மேலீட்டால் இயற்கையாகவே செய்து முடித்தார். தம்மை நாடி வந்தவர்களும் தமது சிஷ்யர்களும் தமக்குக் குழந்தைகள் ஆவர். தாய் தன் குழந்தைகளுக் கிடையில் வேற்றுமை பாராட்டுவது எங்ஙனம்? அவர்கள் எல்லார்க்கும் எல்லாவிதத்திலும் அன்னையாரிடம் சம உரிமையுண்டு. கீழ்க்குடியில் பிறந்தவள் என்று உலகத்தவர் சொல்லும் லௌகிக நிலைமையில் இருந்த மாது ஒருத்தி அன்னையாரிடம் அன்பு பூண்டு அடிக்கடி வருவதுண்டு. ஒருதடவை அவளுடைய கைக்குழந்தை அன்னையார் அமர்ந்திருந்த ஆசனத்தில் மலங் கழித்து அசுசி செய்துவிட்டது. உடனே அதைத் தாமே சுத்தி செய்ய அன்னையார் முற்பட்டார். அப்படிச் செய்வது அடாது என்று மற்றவர் தடுத்தனர். "என் குழந்தை கழித்த மலத்தை நான் எடுக்கவேண்டாமென்று என்னைத் தடுப்பது உங்களுக்கு எங்ஙனம் தகும்?" என்று கேட்டார். உலகத்தா ரனைவரையும் தம் குழந்தைகளாகக் கருதிய அன்னையார் தீண்டத்தகாதவர்களென்று உலகத்தவர் விலக்கி வைப்பவர்களிடத்திலும் இவ்வாறே நடந்துகொள்வார். ஜாதி துவேஷத்தால் மற்றவர்கள் அவர்களுக்கு ஒழுங்காக அன்னம் படைக்க மாட்டார்களென்றெண்ணி அப் பணியைத் தாமே செய்ய முன்வருவார்.

இதிலும் பெரிய மற்றொரு நிகழ்ச்சி நேர்ந்தது. அம்ஜித் என்று அழைக்கப்பட்ட மகம்மதியன் ஒருவன் அன்னையாரைக் காண அடிக்கடி வருவான். அவன் கொண்டுவரும் பழங்களைக் குருதேவர்க்கு நைவேத்தியம் செய்ய அன்னையார் ஏற்றுக்கொள்வார். வங்காள தேசாசாரப்படி அது அடாத செய்கையாகும். மற்ற ஹிந்துக்களுக்கு மன வருத்தம் உண்டுபண்ணக் கூடாதென்றெண்ணி அன்னையார் அம்ஜித்தைத் திண்ணையில் உட்காரவைத்து அன்னமளிப்பார். ஒரு தடவை அவனுக்கு அன்னமளிக்கும்படித் தம் தம்பியின் மகள் நளினியிடம் அவர் சொன்னார். அம்மங்கை ஜாதியொழுக்கத்துக்கு உட்பட்டு எட்ட நின்றுகொண்டு, இலையில் உணவை வீசிப்போட்டாள். இதைக்கண்ட அன்னையார் பெரிதும் வருந்தி " 'முகம் திரிந்து நோக்கக் குழையும் விருந்து' என்கின்றனர் மேலோர். நீயோ உடலில் புடைப்பது போன்று அன்னத்தைப் படைக்கிறாய்! உன் செயலால் உனக்கும் துன்பம் அவனுக்கும் துன்பம்" என்று சொல்லிவிட்டு, வழக்கம்போல் தம் திருக்கரத்தாலேயே அம்ஜித்துக்கு அமுது வழங்கினார். அண்ட நாயகியின் தொண்டனாகிய அவன் விரும்பியதும் அதுவே. அம்ஜித் உணவை அருந்திய பிறகு அவனது எச்சில் இலையை அன்னையார் தாமே அப்புறப்படுத்திவிட்டுச் சாணமிட்டு மெழுகினார். இதற்குத்தடை பெரிதும் உண்டாயிற்று. அவர்கள் மறுப்புக்கு விடையாக அன்னையார் "நரேன், ராக்கால் முதலாயினோர் (அதாவது விவேகானந்த சுவாமிகள், பிரம்மானந்த சுவாமிகள் முதலாயினோர்) எப்படி என் அருமைச் செல்வர்கள் ஆவார்களோ அதே மாதிரி அம்ஜித்தும் என் அருமைச் செல்வன்" என்று சொன்னார். வேற்றுமையை

உண்டு பண்ணுவது அஞ்ஞான மென்றும், ஒற்று மையை உண்டுபண்ணுவது ஞானமென்றும் ஸ்ரீராம கிருஷ்ணர் புகட்டியிருந்தார். அதை அனுஷ்டானத்தில் கொண்டுவந்து உலகனைத்தையும் ஒன்றாகக் கருதுவது எங்ஙனம் என்பதைத் தமது வாழ்க்கையிலேயே நடாத் திக்காட்டியவராவார் நமது ஞானத்தாய் ஆகிய இவர்.

அன்னையாரின் அருளுக்குப் பாத்திரமாக மேல் நாட்டிலிருந்து சகோதரி நிவேதிதை, சகோதரி கிரிஸ் டின், சகோதரி தேவமாதா முதலாயினோர் இந்தியாவுக் குத் தீர்த்த யாத்திரை பண்ணுவது போன்று வந்து சேர்ந்தனர். அவர்கள் எல்லாரும் கல்வியில் தேர்ச்சி மிகப் பெற்றவர்கள். நேர்த்தியான மேல்நாட்டு வாழ்க்கை முறையில் ஈடுபட்டவர்கள். அவர்கள் அதற் குரிய சுகங்களையெல்லாம் பொருட்படுத்தாது தெய்வத் தன்மையோடொத்த தன்மை வாய்ந்த இந்தியத் தாய் மார்களின் வாழ்க்கை முறையை அன்னையாரிட மிருந்து கற்றுக்கொள்ள இங்குவந்து சேர்ந்தார்கள். அன்னையா ரின் கிராமத்துக்குச் சென்று அவர்கள் எளிய குடிசை வாழ்க்கையையும் வாழலாயினர். இந்தியாவின் ஆத் மீய வாழ்க்கையில் அவர்கள் கொண்டிருந்த விசுவாசமே அவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ளும்படி அவர்களைத் தூண்டிற்று. நமது அன்னை ஸ்ரீசாரதா தேவியாரோ அவர்களைத் தம் சொந்தப் புதல்விகளென வரவழைத் தார். ஆசார அனுஷ்டானத்தில், நடையுடை பாவனை யில், பாஷையில், அடியோடு மாறுபட்ட அவர்களோடு, ஆத்மீக வாழ்க்கையையும் பேரன்பையும் ஆதாரமாகக் கொண்ட அன்னையார் மாறுத இணக்கத்தை யுண்டு பண்ணினர். இந்தியத்தாயின் அருள் நிலை உலகத்

தவரைத் தம்மகத்து எடுத்து அணைத்துக் கொள்ள வல்லது என்பதற்கு இதுவே சான்றாகும்.

தமது ஆயுள் முழுதும் அன்னையாருடைய நடையுடை பாவனைகளெல்லாம், ஸ்ரீ ராமகிருஷ்ணர் திருமேனி தரித்துத் தமது அருகில் இருந்தாற்போன்று, நடைபெற்று வந்தன. ஞானவுருவாய், மாறாத் துணைவராய் குருதேவர் யாண்டும் தம்மோடிருந்தது அவருடைய தேர்ந்த அனுபவமாகும். புகைப்படம் ஒன்றைக் குருதேவருடைய புறச்சின்னமாகவைத்து வணங்கினாரெனினும், அதில் விளங்கிய அவருடைய சாந்நித்தியத்தை அன்னையாருடைய பாவனையினின்று தெரிந்து கொள்ளக்கூடும். பூஜா விதிப்படி வழிபடுதற்குப் பதிலாகப் பர்த்தாவோடு அன்புடன் உறவாடுவது போன்று அவர் வழிபட்டார். படத்தின் வாயிலாக நறுமலர் முதலியன சாத்தி நிஷ்டை புரிவார். அன்ன நைவேத்தியம் வைத்து "இனி அமுது செய்யுங்கள்" என்று இறைவனோடு நேர்முகமாகப் பேசுவார். அவர் படைத்த நைவேத்தியத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் ஏற்றுக் கொண்டது அவருடைய நித்திய அனுபவமாகும். அப்படி அவர் ஏற்காத நாளன்று அன்னையாரும் உணவு அருந்தார். ஒருநாள் ஒரு செல்வவந்தர் வீட்டுக்கு அன்னையாரும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்து சந்நியாசிகள் பலரும் பிக்ஷைக்கு அழைக்கப்பட்டிருந்தனர். அன்று ஆங்கு குருதேவருக்குப் பூஜை செய்து அன்ன நைவேத்தியம் படைக்கும்படி அன்னையார் வேண்டிக் கொள்ளப்பட்டார். அறுசுவையுடன் பல பட்சணங்கள் படைக்கப்பட்டன வெனினும் குருதேவர் ஒன்றையும் ஏற்றுக்கொள்ளவில்லை யென்று அன்னையார் கண்டார். ஆதலால் தாமும் அன்று அமுது செய்யவில்லை.

ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி அவர் சாப்பிடா திருந்துவிட்டார். அக்குடும்பத்தார் ஒழுக்கத்தில் சிறந்தவர் அல்லர் என்பது பின்னால் அவருக்குத் தெரிய வந்தது. குருதேவரும் அவரைப் பின்பற்றி அன்னை யாரும், ஆங்கு அன்று அன்னமருந்தா திருந்ததற்கு ஒருவேளை அதுவே காரணமா யிருந்திருக்கலாம். கிரா மத்துக்கு மாட்டுவண்டியில் நெடும் பயணம் போகும் பொழுதும் வசதியான ஓரிடத்தில் தங்கித் தமது முறைப்படி குருதேவரை வழிபடுவது அவருடைய வழக்கம். ஒரு தடவை அத்தகைய பயணத்தில் சமைத்த உணவை பிரம்மசாரி ஒருவன் மட் பாண்டத் தோடு தவறிக் கீழே நழுவ விட்டுவிட்டான். அன்னை யாரோ சிறிதேனும் மனங்கலங்காது உடைந்த ஓடு களின் மீது மண்படாது கிடந்த அன்னத்தைச் சேக ரித்து "இன்று இதைக்கொண்டே தாங்கள் திருப்தி யடையவேண்டும்" என்று குருதேவரிடம் சொல்லி அதை அவருக்குப் படைத்து வழிபட்டார். பாபி களையும் காப்பாற்ற வல்ல பேராற்றல் படைத்திருந்த அன்னையார் அவ்வாற்றலெல்லாம் தமக்குக் குருதேவர் அருளால் வருபவை யென்று பகர்வார். ஸ்ரீ ராம கிருஷ்ணரோடு சம அந்தஸ்து வகிக்கும் உரிமையும் பாங்கும் அவருக்கு இருந்தன வெனினும், தம் பெரு மையை அவர் கனவிலும் கருதியதில்லை. மெய்யன் போடு வழி படுபவர் எல்லாரையும் உயர்வு தாழ்வின்றிக் குருதேவர் ஏற்றுக்கொள்வார் என்பதே அன்னையாரின் துணிபு.

ஏட்டுக் கல்வியினின்று வருவதை விட அதிக நுண்ணறிவு தூய வாழ்க்கையினின்று வருகிறது என் பதற்கு அன்னையாரின் வாழ்க்கை சான்றாகும். பேரறி

வின் ஒரு கூறுகிக் குறிப்பறியும் சக்தி அவரிடத்து வேண்டியவாறு இருந்தது. குருதேவரோடு தக்ஷி ணேசுவரத்தில் வாழ்ந்திருந்த காலத்திலேயே அவர் அதைப் பல நெருக்கடிகளில் கையாளலானார். ஒரு செயலை உதாரணமாக ஈண்டு எடுத்துக் கொள்வோம். கங்கா தீரத்தில் இருந்த பானிஹாட்டி என்ற கிராமத்தில் வைஷ்ணவ மகோற்சவம் ஒன்றில் கலந்து கொள்ள வருஷந்தோறும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் போவது வழக்கம். அத்தகைய நிகழ்ச்சி ஒன்றுக்குத் தாமும் உடன் போக லாமோ வென்று ஒரு தோழி மூலமாக அன்னையார் குருதேவரிடம் விடை கேட்டார். "விருப்ப மிருந் தால் அவளும் உங்களோடு வரலாம்" என்றார் பரம ஹம்ஸ தேவர். குருதேவருக்கு முழு மனதோடு கூடிய சம்மத மில்லை என்பதை அச்சொல்லினின்று அன்னையார் அறிந்து கொண்டார். ஆதலால் ஏதோ சாக்குச் சொல்லித் திருவிழாவிற்குப் போகாது அவர் நின்று விட்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணரும் விழாவினின்று திரும்பி வந்து அன்னையாரின் செயலை மிக மெச்சினார். ஏனென்றால் அவரை உலகத்தவர் முன் வீண் விளம்ப ரம் பண்ணக் குருதேவருக்கு விருப்ப மில்லை.

தர்ம வைத்திய சாலை நடாத்திய சிஷ்யர் ஒருவர் அன்னையாரிடம் வந்து, பணக்காரர்கள் கூட இலவசமாக மருந்து கேட்கின்றனரே, என் செய்வது என்று கேட் டார். சற்றுச் சிந்தித்துப் பார்த்து விட்டு, "பணம் உடையவர்கள் எல்லாரும் உண்மையில் பணக்காரர் ஆகார். இலவசமாகக் கேட்பவர் எல்லாரும் ஏழைகளே. ஆதலால் நீ அவர்களுக்கு மருந்து வழங்க வேண்டியது தான் முறை" என்று அன்னையார் பதில் விடுத்தார். புதிதாக மடத்தில் சேரும் பிரம்மசாரிகளிடத்தில்

அன்னையார் அளவுக்கு மிஞ்சிய அன்பு பாராட்டுவதால், இளைஞர்கள் சட்ட திட்டத்துக்கும் கட்டளைக்கும் உட்படாது அன்னையாரிடம் ஓடிப்போய் விடுகின்றனரென்றும், அதனால் ஆச்ரம வேலைகள் ஒழுங்காக நடைபெறுவதில்லை யென்றும், ஒரு கிளை ஆச்ரமத் தலைவர் அவரிடம் வந்து முறையிட்டார். அதைக் கேட்ட தாயார், “ ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சட்ட திட்டத்தால் வலுத்து வருவதன்று. அன்பு ஒன்றே அதைச் சார்ந்தவர்களை இணைத்து வைக்கிறது ” என்றார். இப்படியே கடினமான எப்பிரச்னைக்கும் அவரிட மிருந்து எளிய இனிய பதிலே வெளி வரும். அவர் இயம்பிய இது போன்ற கூற்றுக்களை ஆராய்ந்து பார்த்தால் அவைகளில் எவ்வளவு மேலாம் கருத்துகள் புதைந்து கிடக்கின்றன என்பது விளங்கும்.

அன்னையார் தன்னந் தனியாகக் கமார்புகூரில் வாழ்ந்திருந்தபோது, ஹரீசன் என்பவன் ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான். தன்னை ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பக்தன் என்று சொல்லிக் கொண்ட அவனுடைய வாழ்க்கை பழிக்குப் புறம்பானதா யில்லை. சில துராசாரங்களில் அவன் ஈடுபட்டவன். ஸ்ரீ ராமகிருஷ்ணரே தன்னிடத்து ஆவிர்ப்பவித்துத் தன்னை ஆட்டி வைப்பதாகச் சொல்லிக் கொள்வான். அத்தகைய பரவச நிலையில் தான் இருப்பதாகவும், அன்னையாரின் தலையில் கை வைத்து ஆசீர்வதிக்க வேண்டுமென்றும், பாசாங்கு பண்ணிக்கொண்டு அவன் அவரைத் தாக்க வந்தான். அன்னையாரோ ஒரு குதிருக்குப் பின்புறம் ஓடித் தப்பிக்க முயன்றார். ஆனால் ஹரீசனும் அவரைத் துரத்திக்கொண்டே ஓடிவந்தான். பல தடவை குதிரைச் சுற்றிச் சுற்றி ஓடிச் சலித்துப்

போன அன்னையார் பேதை போன்று பொறுத்திருத் தல் பின்னும் தகாதென்றெண்ணி, திடீரென்று திரும்பி அவனை வலிந்து காலால் உதைத்தார். திருகிக் கீழே வீழ்ந்தான் கெட்ட கருத்துடைய வேஷதாரி. வீரா வேசத்துடன் அவனது நெஞ்சின் மீது ஒரு காலை நாட்டி நின்றுகொண்டு அன்னையார் அவனது முகத்தில் கையைப் புடைத்தார். ஓயாது விரைந்து வீழ்ந்த அடி யைப் பொறுக்க முடியாமல் அவன் நடு நடுங்கினன். தப்பித்தால் போதுமென்று அவன் மனங்கலங்கிக் கிடந்தபொழுதே அறைவதை அன்னையார் நிறுத்தினர். அந்த நெருக்கடியில் அவர் அதைத்தவிர வேறு என்ன செய்திருக்க முடியும்? அமைதியும் நாணமும் வடி வெடுத்திருந்த அன்னையார் அதுபோன்ற ஆபத்து வேளைகளில் வீரலக்ஷ்மியின் வடிவெடுக்கவும் வல்லவரா யிருந்தார். ஆடவருடைய உதவியையே யாண்டும் எதிர்பார்த்து நிற்கும் இக்காலத்து இந்திய மகளிர்க்கு அன்னையாரின் இச்செயலில் அரிய பாடம் ஒன்று கற் றுக்கொள்ளக் கிடக்கிறது. பலமின்மையையும் பயங் கொள்ளித்தனத்தையும் பெண்மையோடு பொருத்தி வைக்கலாகாது. வேண்டியபொழுது வீரவெறி வகிக்க வல்ல வன்மையும், சமயோசித புத்தியும் பெண்டிர் களுக்கு இன்றியமையாதவைகளாகும்.

மிகச் சிக்கலான பிரச்னைகளையும் அன்னையார் எளி தில் கிரகித்து அவைகளினின்று மீளுதற்கான வகை களைச் சொல்லித் தருவார். சுத்த சைதன்யத்தையே சார்ந்திருந்த அவருடைய தூய உள்ளத்துக்குக் கடின மான கேள்வி அல்லது சந்தர்ப்பம் எதுவு மில்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் கல்வியில் சிறந்த வர்களாயும், சமுதாய இயல்பை முற்றும் அறிந்தவர்க

ளாயும், ஞானத்தில் தீர்க்க தரிசிகளாயும் இருந்தனர்; எனினும், மேலாம் கருமம் எதிலும் அவர்கள் அன்னையாரின் அனுமதியின்றிப் பிரவேசிக்கமாட்டார்கள். அன்னையாரின் அபிப்பிராயமும் ஈசுவர திருவுளமும் ஒன்று என்பது அந்த ஞானவான்களுடைய சித்தாந்தம். அன்னையாரின் அனுக்கிரகத்தைப் பெற்றபின்பே ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் தர்ம ஸ்தாபனத்தின் பொருட்டு மேல் நாடுகளுக்கு திக்குவிஜயம் செய்யத் துணிந்தார். ஸ்ரீமத் பிரேமானந்த சுவாமிகளுக்குத் தமது ஞானத்தாயின் சொல்லினும் மிக்க வாசகம் எதுவும் இருந்ததில்லை. அன்னையாரின் திருவாயினின்று தோன்றும் மொழியை ஈசுவர ஆதேசமெனப் பாராட்டிப் பணிந்து நடப்பார் அவர். பரவசத்தால் தமது பருத்த திருமேனி பதைபதைக்க ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகள் தமது அருள் அன்னையின் முன்னிலையில் தோன்றித் தண்டனிடுவார். அன்புக்கும் அறிவுக்கும் ஆற்றலுக்கும் உறைவிடமாகிய அகிலாண்ட நாயகியே உருவெடுத்து வந்தவராவார் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் என்பது அந்த சுவாமிகளது ஞானக்காட்சியாயிற்று.



பதினான்காம் அத்தியாயம்

# பூத உடல் நீத்துப் பொன்று உடல் புகுதல்

இறுதியாக அன்னையார் தொடர்ந்து ஓராண்டு தம் கிராமத்தில் வாழ்ந்திருந்தார். அத்துடன் அவருடைய கிராமவாசம் முற்றுப்பெற்றது. 1920-ம் வருஷம் பெப்ரவரி மாதத்தில் மெலிந்த திருமேனியுடன் அவர் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். மண்ணுலகில் அவருடைய வாழ்க்கை முடிவு பெறுவதன் அறிகுறிகள் தென்பட்டன. தம்பியின் மகள் ராதையிடத்திருந்து அவர் மனதைப் பிரித்தெடுத்துக் கொண்டதே அவ்வறிகுறிகளுள் முக்கியமானதாகும். அன்னையாரின் மனது பூலோகத்தில் பொருந்தி யிருப்பதற்கு அப் பெண்ணைப் பரிபாலிப்பதே ஒரு ஏதுவா யிருக்கட்டும் என்று குருதேவர் ஞானக் காட்சியில் கட்டளையிட்டிருந்தார். இப்பொழுதோ அவருடைய மனது ராதையினிட மிருந்து விலகிக்கொண்டது மல்லாது, வெளியுலக திருஷ்டியும் ஒடுங்கிக் கொண்டே வந்தது. உடலில் ரத்தம் குறையவும், காய்ச்சல் தொடர்ந்து சில திங்களாக அவ்வுடலை வாட்டவும் செய்தன. திறமை வாய்ந்த மருத்துவர் சிலர் நோயைக் குணப்படுத்த முயன்று வந்தனர். அன்னையாரோ உடலை மறந்து பிரம்ம நிஷ்டையிலிருப்பார்; அல்லது உடல் உணர்ச்சி பெற்றிருக்கும் பொழுது ஐந்து வயதுச் சிறுமியின் பாங்குடன் பேசுவார். ஆகாரம் எதையும் ஏற்க மறுக்கும் பொழுதும், கங்கையில் போய் நீராடி விளையாட வேண்டு மென்று சொல்லும் பொழுதும், அவரிடத்திருந்த குழந்தையின்

இயல்பு தெற்றெனத் தோன்றும். ஔஷதங்களை அவர்கள் ஓயாது வழங்கியதும், உஷ்ணமானியைக் கொண்டு வெப்ப நோயின் வேகத்தை அவர்கள் அளந்ததும் அன்னையார்க்குப் பிடிக்கவில்லை. உடல் ஒடுங்கும் காலம் நெருங்கிவிட்டது. உள்ளம் உயர் நிலையில் திளைத்திருந்தது. அதற்கிடையில் உலகத்தவர் தம்மை ஏன் உபத்திரவப் படுத்தவேண்டும் என்பதே அவரது கருத்து. "இந்த பூலோக விளையாட்டு எனக்கினி வேண்டாம். காயத்தைக் களைந்தெறிந்து விட்டுப் பரமானந்தத்தில் திளைத்திருப்பேன்," என்று தமக்குள்ளே சொல்லிக் கொண்டு அவர் பூரித்திருப்பார்.

உடல் மறைதற்கு ஒரு மாதத்துக்கு முன்பு தாம் படுத்திருந்த அறையினின்றும் குருதேவருடைய படத்தை அப்புறப் படுத்தும்படி அவர் பகர்ந்தார். அதற்குக் காரணம் யாதோவென்று கேட்டபொழுது மல ஜலம் கழிக்கத் தாம் இனி வெளியே நடந்துபோக முடியாதென்றும், தம்முடல் அத்தகைய அசுசியான நிலைக்கு வந்திருக்கும் பொழுது குருதேவருடைய படம் ஆங்கிருப்பது முறையன்று என்றும் விடையிறுத்தார். அந்நிலையிலும் தாம் அருந்துதற் கிருந்த கஞ்சி முதலியவைகளை அவர் வழக்கம்போல் அண்ணலுக்கு அர்ப்பணம் பண்ணிவந்தார்.

அன்னையார் இறுதியில் இயம்பிய சில உறுதி மொழிகள் நமக்கு உயிர் அளிக்கும் உபதேசமாகும். கடையில் பண்டங்களை விலைக்கு வாங்குவதுபோன்று, மனிதர் செய்யும் ஜபதபத்துக்குக் கைம்மாறாக ஈசுவர சாக்ஷாத் காரம் வருவதில்லை. ஓயாது அவனை வழுத்துதலின் இடையே அவனைப் பெறுதற்கு அவனது அருளையே நாடியிருக்க வேண்டும்.

உலக ஆசை அறுபடுமளவு ஈசுவர பக்தி அதிகரிக்கும்.

காற்று மேகத்தைச் சிதறடிப்பது போன்று இறைவனுடைய திருநாம ஜபம் உலகப் பற்றுக்களை ஓட்டுகிறது.

சந்தனத்தைத் தொடுவதால் கைக்கு மணம் வருவது போன்று, ஈசுவர தியானத்தால் மனது ஈசுவரமயமாகிறது.

ஓயாத ஜபம் மனதை ஸ்திரப்படுத்துகிறது.

தூய மனதில் ஈசுவர பாவனை குதித்தெழுந்து வருகிறது.

தியானம் பண்ணுவதும் சேவை செய்வதும் ஒன்றோடொன்று நன்கு இணைக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஈசுவர கிருபையே துன்பமாக வடிவெடுத்து வருகிறது. அத்தகைய துன்பத்தைப் பொறுத்துக்கொள்பவரே பக்திக்குரியவர் ஆகின்றனர்.

இல்லறத்தார் துறவறத்தார் ஆகிய இருதரத்தாருக்கும் பிரம்மசரியம் இன்றியமையாதது; ஏனென்றால் உடல் சம்பந்தமான ஆசை போனொழிய ஆத்மானந்தம் தோன்றாது.

உடல் இன்றிருக்கிறது, நாளை மறைகிறது; அதற்கிடையிலும் அது பல துன்பங்களுக்கு உட்படுகிறது; இப்படி விசாரம் செய்து விவேகத்தையும் வைராக்கியத்தையும் பெறவேண்டும்.

கடவுளுக்காக அனைத்தையும் துறப்பவன் நடமாடும் கடவுளாகிறான்.

விதி எனும் தேவதை, துறவியைக் குறித்துத் தான் முன் விதித்தவைகளை யெல்லாம் தானே துடைத்துவிடுகிறாள்.

அன்னையாரின் திருமேனி மறைதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு நிகழ்ச்சி யொன்று நேர்ந்தது. நோய்வாய்ப்பட்டிருந்த அவர் அறைக்குள் யாரும் போய் இடத்தை அடைத்துக்கொள்ளலாகாது என்ற கட்டளை பிறந்திருந்தது. அவரைப் பார்க்க வந்த அன்னபூரணம்மாள் எனும் மாது ஒருத்தி உள்ளே நுழைதற்கு அனுமதியின்மையால் வாயிலில் அமர்ந்துகொண்டு இங்ஙனம் எண்ணினர் :—“ அன்னையின் பூலோக வாழ்க்கை எனும் நாடகம் முற்றுப் பெற்றுத் திரையும் கீழே விழப்போகிறது. இனி இந்தப் பாழுலகில் நம்முடையது என்று சொல்லுதற்கு என்ன இருக்கிறது? எங்கள் கதி என்னுகுமோ ! ” இதற்குள் படுக்கையில் திரும்பிப் படுத்த தாய் இவளைக் காணலுற்று, அருகில் வரும்படி சைகை செய்தார். வணங்கிவிட்டு முழந்தாளிட்டு நின்றுகொண்டிருந்த அம் மங்கையின் தலையைத் தடவிக்கொடுத்து, அடங்கிய, ஆனுல் உறுதியான குரலில் அன்னையார் இதனை இயம்புவாராயினர்—“ மகளே, உனக்கு மன வமைதி வேண்டுமானுல் உலகத்தவர்மீது குறை கூருதே. மற்றும் உன்னிடத்துள்ள குற்றத்தையே கிளறிப்பார். உலக முழுதையும் உன்னுடையதாக்கக் கற்றுக்கொள். நமக்கு உரியர் உரியராகாதார் என்று சொல்லும் வேற்றுமை நிலைமையில் யாருமில்லை. உலகனைத்தும் நமதே. இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.” உடலை உகுக்கு முன்பு அன்னபூரணம்மாள் மூலமாக உலகனைத்துக்கும் அன்னை கொடுத்த கடைசிச் செய்தி இதுவே.

தீபத்தில் எண்ணெய் குறைவதுபோன்று அதி வேகமாய் அன்னையின் ஆக்கையின் வலிவு ஒடுங்கிற்று. இறுதிக்காலமும் அணுகிற்று. பல்லாண்டுகளாகத்

தமது தோழிமார்களாக விருந்த கொலாப் அம்மை யையும் யோகினி அம்மையையும் அந்திய காலம் வரை யில் நன்கு ஆதரிக்க வேண்டு மென்று ஸ்ரீமத் சாரதா னந்த சுவாமிகளிடம் அன்னையார் ஆக்ஞாபித்தார். பிறகு, சூழுமி யிருந்த சிஷ்யர்களை யெல்லாம் அவர் கண்குளிரப் பார்த்து, மனமுவந்து ஆசிர்வதித்தார். மனது அந்தர் முகமாகத் திரும்பியது. இருள் படிந் திருந்த முகத்தில் இப்பொழுது தெய்வீக எழில் வீசிற்று. அந் நிலையில் பிராணனும் அடங்கியது. 1920-ம் வருஷம் ஜுலை மாதம் 21-தேதி அதிகாலையில் பிரம்ம முகூர்த்தத்தில் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் பூத உடல் நீத்துப் பொன்று உடல் எய்தினார். தக்க சடங்குகளுடன் தேகம் கல்கத்தாவுக்கு அருகி லுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைமை ஸ்தானமாகிய பேலூர் மடத்தில், கங்கைக் கரை யோரத்தில் தகனம் செய்யப் பட்டது. ஞானிகள் தேகத்தையும் தகனம் செய்வது ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்து ஐதிக மாகும். தகனம் செய்யப்பட்ட இடத்தில் அன்னைக்குக் கட்டு விக்கப்பட்ட சிறிய ஆலயம் ஒன்று மடத்தை அலங் கரித்துக் கொண்டு நிற்கிறது.

பெண்மைக்கு ஓர் எடுத்துக் காட்டாகப் பரம ஹம்ஸ தேவர் அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரை உல குக்கு அளித்தார். அவரது பெண்மையில் மனைமாட் சியும், தாய்மையும், துறவும் ஒன்று சேர்ந்து உச்சஸ் தானம் பெற்றுத் திகழ்வன வாயின. புனித மடைந்த பெண்மை பாரிலுள்ளோர்க்கு எத்தகைய பெருமையைப் பொழிய வல்லது என்பதற்கு அன்னையார் ஒரு சான்று வார். பெண்பாலார் பண்பு அடையாத நாடு பயன் ஒன்றும் அடையாது என்பது முன்னுளைய மேலோர்

கொள்கை. அன்னார் பெண்மையைத் தெய்வத் தன்மையோடு இணையாக வைத்து வணங்கினர். ஆகையாலேதான் அவர்கள் வணங்கிய இறைவனும் மாதொரு பாகன் ஆனான். அன்னை பராசக்தியின் இயல்பாகிய பெண்மையே இந்தியாவுக்கு உயிர் நாடி. பெண்மையைச் சிறுமைப் படுத்தியதினாலேயே இக்காலத்து இந்தியர் உயிரை இழந்தவர் போன்று ஆய்விட்டனர். இந்த நெருக்கடியில் பண்டைப் பெண்மை யனைத்தும் திரண்ட தொரு வடிவாய் நம்மிடையில் வந்தருளினார் அன்னை ஸ்ரீ சாரதா தேவியார். அத்தகைய புனிதம் வாய்ந்த பெண்ணுலகை நாம் எவ்வாறு போற்றுவது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் நமக்கு வழிகாட்டி யிருக்கிறார். அன்னையாரின் பூத உடல் இனி நம் இடையில் இல்லை. ஆனால் அன்னையாரின் வாழ்க்கை முறை எந்நாளும் இந்நன்னாட்டில் நிலைத்திருக்கும். தேவதைகளுக்கு ஒப்பான இந்தியப்பெண்ணரசிகளது திருக்கூட்டத்தில் திலகம் போன்று அன்னையார் திகழ்வாராக! அவருடைய நல்வாழ்வைப் பின் பற்றி நம்மனோர் நலம் மிகப் பெறுவார்களாக!

"பேயென்றும் மாய்கையென்றும்
பெண்களை இகழ்ந்து பேசிப்
பெருந்துற வடைந்தபேரும்
பிழைபுரிந் தவரே யன்றோ!
தாயென்றும் துணைவியென்றும்
தன்னுடை நோக்கம் காக்கும்
சகதர்ம சக்தியென்றும்
சாரதா தேவிதன்னை

நீயென்றும் மகிழ்ந்து கொண்ட
நிர்மல வாழ்க்கை தன்னை
நினைத்திடுந் தோறும் நெஞ்சம்
நெக்குநெக் குருகும் ஐயா
தீயென்னப் புலனைக்காய்ந்த
தீரனே ஞானவாழ்வின்
தீபமே ராமகிருஷ்ண
தேவனே போற்றி போற்றி."



Kesari Printing Works, Madras.

## மடத்து இதர புத்தகங்கள்

| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் திவ்விய சரிதம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண வசனாமிருதம் ... | 1 | 8 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் ... ... | 0 | 8 | 0 |
| குருதேவர் வாக்கியம் ... ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீ சாரதா தேவியார் சரிதம் ... | 0 | 6 | 0 |
| ஸ்ரீ விவேகானந்த சரிதம் ... ... | 0 | 12 | 0 |
| ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளது கடிதங்கள் | 0 | 10 | 0 |
| ஸ்ரீ விவேகானந்த ஞானதீபம் ... | 2 | 0 | 0 |
| இராஜயோகம்—ஸ்ரீ விவேகானந்தர் அருளியது | 1 | 4 | 0 |
| பக்தியோகம் ... ,, ... | 0 | 10 | 0 |
| கருமயோகம் ... ,, ... | 0 | 12 | 0 |
| எனது குருநாதர் ... ,, ... | 0 | 3 | 0 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை ... | 0 | 12 | 0 |
| பஜனாவளி — பக்திரசம் பொருந்திய 250 பாக்கள் கொண்டது ... ... | 0 | 12 | 0 |
| ஈசோபநிடதம் ... ... | 0 | 6 | 0 |

சமய சமூக சம்பந்தப்பட்ட பல அரிய கட்டுரைகளுடன் வெளிவரும் 'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்' என்னும் மாதாந்தரப் பத்திரிகை யொன்று வெளிவருகின்றது. வருஷ சந்தா ரூபா இரண்டு மாத்திரம். விஜய சந்தாதாரர்க்கு மேற்கண்ட தமிழ்ப் புத்தகங்களில் பல குறைந்த விலைக்குத் தரப்படும்.

விரிவான புத்தக ஜாபிதாவுக்கு எழுதவும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மைலாப்பூர், சென்னை.